கண்டதிருவிண்டிடைக் கண்டித்துநிற்றலைக் ... *
காலமோ தையறிகிலேன் ... *
மைதிகழுமுகிலினங் குடைதிழற்றிடவட்ட ... *
வரையிலெனும் செம்பொன்மேரு ... *
மால்வரையின்முதுகூடும் யோகதண்டக்கோல் ... *
வரைந்துசெய விருதுகாட்டி ... *
மெய்திகழுமஷ்டாங்க யோகபூமிக்குள்வளர் ... *
வேந்தரோ குணசாந்தரோ ... ... *
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற ... *
வித்தகச் சித்தர்கணமே ... ... (ரு)

கெசதுரகமுதலான சதுரங்கமணமாதி ... *
கேள்வியி னிசைந்துநிற்பக் ... ... *
கெடிகொண்டகலமாறு மும்மண்டலத்திலுங் ... *
கிள்ளாக்கு செலலமிக்க ... ... *
தெசவிதமதாய்நின்ற நாதங்களோலிடச் ... *
சிங்காச நாதியர்களாய்த் ... ... *
திக்குத்திகந்தமும் பூரணமதிக்குடை ... ... *
திகழ்ந்திட வசந்தகால ... ... *
மிசையமலர்மீதுறை மணம்போலவானந்த ... *
மிதயமேற் கொள்ளும்வண்ண ... *
மென்றைக்குமழியாத சிவராசயோகமா ... ... *
மிந்த்ராதி தேவர்களெலாம் ... ... *
விசயசயசயவென்ன வாசிசொல வேகொலு ... *
விருக்குநும்பெருமை யெளிதோ ... *
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற ... *
வித்தகச் சித்தர்கணமே .. ...(சா)

ஆணிலேபெண்ணிலே யெப்போலவொருபேதை... *
யகிலத்தின் மிசை யுள்ளதோ ... ... *
வாடிய கறங்குபோ லோடியழல் சிந்தையை ... *
யடககியொருசணமேனும்யான் ... *
காணிலேந்திருவருளை யல்லாதுமௌனியாய்க் ... *
கண்மூடி யோடுமூச்சைக் ... ... *
கட்டிக்கலாமதியை முட்டமேழுலவெவ் ... ... *
கனலினை யெழுப்பதினைவும் ... *
பூணிலேனிற்றைநாட் கற்றதுங்கேட்டதும் ... *
போக்கிலே போகவிட்டுப் ... *
பொய்யுலகநூயினே நூயினுங்கடையான ... *
புன்மையே னின்னமின்னம் ... *

வீணிலேபலேயாமன் மலையிலக்காகநீர் ... ... *
வெளிப்படத் தோற்றலவேண்டும் ... *
வேதாந்தசித்தாந்த சமாசநன்னிலைபெற்ற ... *
வித்தகச் சித்தர்கணமே ... ... (எ)

கன்னலமுதெனவுமுக் கனியெனவும்வாயூறு ... *
கண்டெனவு மடியெடுத்துக் ... *
கடவுளர்கடந்ததல வழுதழுதுபேய்போற் ... ... *
கருத்திலெழு கின்றவெல்லா ... *
மென்னதறி பாமையறி வென்றுமிருபகுதியா ... *
லீடுதமிழென் றமிழினுக் ... *
கின்னல்பகராதுலக மாராமைமேலிட் ... .. *
டிருத்தலாவித்த மிழையே ... *
சொன்னவணியாவனவன் மூத்திசித்திகளெலாந் ... *
தேர்ந்தநெறி யேபடித்தீர் ... ... *
சொல்லுமெனவவர்நீங்கள் சொன்னவவையிற்சிறிது *
தோய்ந்தருண சாந்தனெனவே ... *
மின்னல்பெறவேசொல்ல வச்சொல்கேட்டடிமைமனம்
விகசிப்ப தெந்தநாளோ .. ... *
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற ... ... *
வித்தகச் சித்தர்கணமே ... .. (அ)

பொற்பிறுநிலைகாலில் வன்னுகிர்படைத்தலாற் ... *
போந்திடையொடுக்க முறலாற் .. *
பொலிவானவெண்ணீறு பூசியேயருள்கொண்டு... .. *
பூரித்தவெண் ணீர்மையா ... ... *
லெற்படவிளங்குகக னத்திலிமையாவிழி ... *
யிசைந்துமே ரேக்கமுறலா ... *
லிரவுபகலிருளான கனதந்திபடநூறி ... *
யிதயங்களித் திடுதலாற் ... ... *
பற்பலவிதங்கொண்ட புலிகலையினுரியது ... *
படைத்துப்ர தாபமுறலாற் .. *
பனிவெயில்கள்புகுதாம னெடியவான்றொட்டநெடிய *
பருமர வனங்களாறும் ... ... *
வெற்பினிடையுறைதலாற் றவராசசிங்கமென ... *
மிகவோருமைப் புகழ்வர்காண் ... *
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற ... ... *
வித்தகச் சித்தர்கணமே ... ...(௯)
கல்லாதபேர்களே நல்லவர்க ளல்லவர்கள் ... ... *
கற்றுமறி வில்லாதவென் ... ... *

கர்மத்தையென்சொல்வேன்மதியையென்சொல்லுவேன்
கைவல்ய ஞானநீதி ... ... *
நல்லோருரைக்கிலோ மர்மமுக்கியமென்று ... *
நாட்டுவேன் கர்மமொருவ ... *
ஞூட்டினுலோபழைய ஞானமுக்கியமென்று ... *
நவிலுவேன் வடமொழியிலே ... *
வல்லாமொருத்தன் வரவுந்த்ராவிடத்திலே ... *
வந்ததாவி வகரிப்பேன் ... ... *
வல்லதமிழறிஞர்வரி னங்ஙனேவடமொழியின் ... *
வசனங்கள் சிறிதுபுகல்வேன் ... *
வெல்லாமலெவரையு மருட்டிவிடவகைவந்த ... *
வித்தையென் முத்திதருமோ ... *
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற ... *
வித்தகச் சித்தர்கணமே ... ... (௰)

சித்தர்கணம்-முற்றுப்பெற்றது. ஆ-௩௩.

---

# ஆனந்தமானபரம்

---

சொல்லாதமெத்தனை குணக்கேட்டைநீக்குமக் ... *
குணமொன்று மொன்றிலேன்பாற் ... *
கோரமெத்தனைபக்ஷ பாதமெத்தனைவன் ... *
குணங்களெத் தனைகொடியபாழ்ங் ... *
கல்லாமையெத்தனை யகந்தையெத்தனைமனக் ... *
கள்ளமெத் தனையுள்ளசற் ... ... *
காரியஞ்சொல்லிடினு மறியாமையெத்தனை ... *
கதிக்கென் றமைத்தவருளிற் ... *
செல்லாமையெத்தனைவிர் தாகோஷ்டியென்னிலோ ... *
செல்வமெத் தனைமுயற்சி ... ... *
சிந்தையெத்தனைசலன மிந்த்ரசாலப்போன்ற ... *
தேகத்தில் வாஞ்சையுற்தலா ... ... *
யல்லாமையெத்தனை யமைத்தனையுனக்கடிமை ... *
யானே னிலைக்குமாளோ ... ... *
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... ... *
யானந்த மானபரமே ... ... (௧)
தெருளாகிமருளாகி யுழலுமனமாய்மனஞ் ... *
சேர்ந்துவளர் சித்தாகியச் ... ... *
சித்தெலாஞ்சூழ்ந்தசிவ சித்தாய்விசித்ரமாய்த் ... *
திறமாகி நானுவிதப் ... ... *

பொருளாகியப்பொருளை யறிபொறியுமாகியைம் ...*
புலனுமாயைம் பூதமாய்ப் ... ...*
புறமுமாயகமுமாய்த் தூரஞ்சமீபமாய்ப் ... *
போக்கொடு வரத்துமாகி ... ...*
யிருளாகியொளியாகி நன்மைதீமையுமாகி ... *
யின்றாகி நாளையாகி ... ... *
யென்றுமாயொன்றுமாய்ப் பலவுமாயாவுமா ... *
யிவையல்ல வாயநின்னை... ... ...*
யருளாகிநின்றவர்க ளறிவதல்லாலொருவ ... *
ரறிவதற் கெளிதாகுமோ ... ... *
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி... ...*
யானந்த மானபரமே ... ... (௨)

மாறுபடுதர்க்கந் தொடுக்கவறிவார்சாண் ... *
வயிற்றின் பொருட்டதாக .. ...*
மண்டலமும்விண்டலமு மொன்றாகிமனதுமல .. *
மாலாகி நிற்கவறிவார் ... ... *
வேறுபடுவேடங்கள் கொள்ளவறிவாரொன்றை ... *
மெணமெணென்றகம் வேறதாம் ... *
வித்தையறிவாரெமைப் போலவேசந்தைபோன் ...*
மெய்ந்நூல் விரிக்கவறிவார் ... ...*
சீறுபுலிபோறசீறி மூச்சைப்பிடித்துவிழி .. *
செக்கச் சிவக்கவறிவார் ... ... *
சிரமென்றுதந்தம் மதத்தையேதாமதச்... ...*
செய்கைகொடு மூளறவறிவா ... *
ராறுசமயங்கடோறும் வேறுவேறாகிவிளை ...*
யாடுமுனை யாவரறிவா ... ... *
ரண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ...*
யானந்த மானபரமே ... ... (௩)

காயிலையுதிர்ந்தகனி சருகுபுனன்மண்டிய . ...*
கடும்பசி தனக்கடைத்துங் ... ... *
கார்வரையின்முழையிற் கருங்கல்போலசையாது.....*
கண்மூடி நெடிதிருந்தும்... ... *
தீயினிடைவைகியுந் தோயமதின்மூழ்கியுந் ... *
தேகங்க ளென்பெலும்பாய்த் ... *
தெரியநின்றுஞ்சென்னி மயிர்கள்கூடாக்குருவி ... *
தெற்றவெயி லூடிருந்தும் ... *
வாயுவையடக்கியு மனத்தினையடக்கியு... ... *
மௌனத்திலே யிருந்து ... ... *

மதிமண்டலத்திலே னல்செல்லவமுதுண்டு ... *
வனமூடிருந்துமறிஞ ... ... *
ராயுமறைமுடிவான வருணாடிநாடிமை... ... *
யகிலத்தை நாடன்முறையோ ... *
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... *
யானந்த மானபரமே .. ... (௪)

சுத்தமுமசுத்தமுந் துக்கசுகபேதமுந் ... ... *
தொந்தமுட னிர்த்தொந்தமும் ... *
ஸ்தூலமொடுசூக்ஷமமு மாசையுநிராசையுஞ் ... *
சொல்லுமொரு சொல்லின்முடிவும் ... *
பெத்தமொடுமுத்தியும் பாவமொடபாவமும் ... *
பேதமொட பேதநிலையும் ... ... *
பெருமையொடுசிறுமையு மருமையுடனெளிமையும் *
பெண்ணினுட னாணுமற்று ... *
நித்தமுமநித்தமு மஞ்சனநிரஞ்சனமு ... *
நிஷ்களமு நிஷ்சகளமு... ... ... *
நீதியுமனீதியு மாதியொடனாதியு ... ... *
நிர்விஷய விஷயவடிவு ... ... *
மத்தனையுநீயல தௌத்தனையுமில்லையெனின் ... *
யாங்களுனை யன்றியுண்டோ ... *
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... *
யானந்த மானபரமே ... ... (௫)

காராருமாணவக் காட்டைக்களைந்தறக் ... *
கண்டகங் காரமென்னும் ... ... *
கல்லைப்பிளந்துநெஞ் சகமானபூமிவெளி .. ... *
காணத் திருத்திமேன்மேற் .. ... *
பாராதியறியாத மோனமாம்வித்தைப் ... *
பதித்தன்பு நீராகவே .. ... ... *
பாய்ச்சியதுபயிராகு மட்டுமாமாயைவன் ... *
பறவையணு காதவண்ண ... ... *
நேராகநின்றுவிளை போகம்புசித்துண்ட ... *
நின்னன்பர் கூட்டமெய்த ... ... *
நினைவின்படிக்குநீ முன்னின்றுகாப்பதே ... *
நின்னருட் பாரமென்று ... ... *
மாராருமறியாத சூதானவெளியில்வெளி ... *
யாகின்ற துரியமயமே ... ... *
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... *
யானந்த மானபரமே ... ... (௬)

வாருதிபூதமா யகிலாண்டகோடியாய் ... *
மலையாகி வளைகடலுமாய் ... ... *
மதியாகியிரவியாய் மற்றுளவெலாமாகி ... *
வான்கருணை வெள்ளமாகி ... ... *
நானாகிநின்றவனு நீயாகிநின்றிடவு ... *
நானென் பதற்றிடாதே ... ... *
நானென்னக்குளறி நானுவிகாரியாய் ... *
நானறிந் தறியாமையாய் ... ... *
போனாலதிட்டவலி வெல்லவெளிதோபகற் ... *
பொழுதுபுகு மூன்கண்மூடிப் ... *
பொய்த்துயில்கொள்வான்றனை யெழுப்பவசமோவினி
போதிப்ப தெந்தநெறியை ... [
யானுமென்கொடுமை யனியாயமனியாய ... ...*
மார்பா லெடுத்துமொழிவே... ... *
னண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... *
யானந்த மானபரமே... ... ...(எ

பொய்யினேன்புலையினேன் கொலையினேனின்னருள் *
புலப்பட வறிந்துநிலையாப் ... *
புன்மையேன்கல்லாத தன்மையேனன்மைபோற் ... *
பொருளெலாப் பொருளைநாடும் ... *
வெய்யனேன்வெகுளியேன் வெறியனேன்சிறியனேன் *
வினையினே னென்னென்னைநீ ... *
விட்டுவிடநினைவையேற் றட்டழிவதல்லாது ... *
வேறுகதி யேதுபுகலாய் ... ... *
ஐயனேமெய்யனே யுயிரினுக்குயிரான ... *
துணைவனே யிணையொன்றிலாத் ... ... *
துரியனே துரியமுங் காணுவதீதனே... ... *
சுருதிமுடி மீதிருந்த ... ... *
வையனேயப்பனே யெனுமறிஞாறிவைவிட் ... *
டகலாத கருணைவடிவே ... ... *
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... *
யானந்த மானபரமே ... ... (அ

எத்தனைவிதங்கடான் கற்கினுங்கேட்கினுமென் ... *
னிதயமு மொடுங்கவில்லை ... ... *
யானெனுமகந்தைதா னெள்ளளவுமாறவில்லை .. ...
யாதினும் மபிமானமென்... ... *
சித்தமிசைகுடிகொண்ட சிகையோடிரக்கமென்,.....
சென்மத்து நானறிகிலேன் ...

சிலமொருதவவிரத மொருகனவிலாயினுந் ... *
தெரிசனங் கண்டுமறியேன் ... *
பொய்த்தமொழியல்லான் மருந் துக்குமெய்ம்மொழி *
புகன்றிடேன் பிறர்கேட்கவே ... ✿
போதிப்பதல்லாது சும்மாவிருந்தருள் ... *
பொருந்திடாப் பேதைநானே ... *
பத்தனெகுணகடேர் கண்டதாக்கேட்டதா ... ... ✤
வவனியிசை யுண்டோசொலா ... ...✿
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... .. ✤
யானந்த மானபரமே ... ... (கூ)
எக்காலமுந்தனக் கென்னவொருசெயலிலா ... ...*
வேழைநீ யென்றிருந்திட் ... ... *
டெனதாவியுடல்பொருளு மௌனியாய்வந்துகை ...✿
யேற்றநம தென்றவன்றே ... *
பொய்க்காலதேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
பொய்யுடலை மெய்யென்னலும் ... *
பொய்யுறவுபற்றலும் பொய்யாகுநானென்னல்... .. ✤
பொய்யினும் பொய்யாகையான் ... *
மைக்காவிருட்டனைக விருளிலையிருவினைகள் ... *
வந்தேற வழியுமிலை ... ... ...*
மனமில்லையம்மனத் தினமில்லைவேறொரு ... *
வரவில்லை போக்குமிலலை ... ... *
பக்காலமிக்கால மென்பதிலையெல்லா ... ...✿
மதீதமய மானதன்றோ ... ... *
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி ... *
யானந்த மானபரமே ... ... (ல)

ஆனந்தமானபரம் - முற்றுப்பெற்றது. ஆ-எசு.

## சுகவாரி.



இன்னமுதகனிபாகு கற்கண்டுசீனிதே ... *
னெனருசித்திட வரியவந்... ... ✿
தின்பங்கொடுத்தநினை யெந்நேர நின்னன்ப ... *
ரிடையறா தருகிநாடி ... ... *
புன்னியகருத்தவிழ வுளாகுளறியுடலெங்கு ... .. *
மோய்ந்தயர்ந் தவசமாகி ... ...*
புணர்வரியபேரின்ப வனுபூதியுணர்விலே ... ... ✿
புணர்வார்க ளுள்ளபடிகாண் ... ✿

கன்னிகையொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங் ... *
　　கைக்கொள்வள் பக்குவத்திற் ... *
கணவனருள்பெறின்முனே சொன்னவாறென்னெனக் *
　　கருதிநகையாவ ளதுபோற் ... *
சொன்னபடிகேட்குமிப் பேதைக்குநின்கருணை ... *
　　தோற்றிற் சுகாரம்பமாஞ் ... ... *
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபராஞ் ... *
　　சோதியே சுகவாரியே ... ... (௧)

அன்பின்வழியறியாத வென்னைத்தொடர்ந்தென்னை ... *
　　யறியாத பக்குவத்தே ... ... *
யாசைப்பெருக்கைப் பெருக்கிக்கொடுத்துநா........*
　　னற்றே னலந்தேனென ... ... *
வென்புலமயங்கவே பித்தேற்றிவிட்டா ... *
　　யிரங்கியொரு வழியாயினு ... *
மின்பவெளமாகவந் துள்ளங்களிக்கவே ... *
　　யெனைநீ கலந்ததுண்டோ ... ... *
தன்பருவமலருக்கு மணமுண்டுவண்டுண்டு ... ... *
　　தண்முலை தனக்குமுண்டோ ... ... *
தமியனேற்கிவ்வணந் திருவுளமிரங்காத ... *
　　தன்மையாற் றனியிருந்து ... ... *
துன்பமுறுமெனங்ஙனே யழியாதநின்னன்பர் ... *
　　சுகம்வந்து வாய்க்குமுறையாய் ... *
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபராஞ் ... *
　　சோதியே சுகவாரியே ... ... (௨

கல்லேனுமையவொரு காலத்திலுருகுமென் .. *
　　கன்னெஞ்ச முருகவிலையே ... ...
கருணைக்கிணங்காத வன்மையையுநான்முகன் ... *
　　கற்பிக்க வொருகடவுளோ ...
வல்லான்வகுத்ததே வாய்க்காலெனும்பெரு ... ...
　　வழக்குக் கிழுக்குமுண்டோ ...
வானமாய்நின்றின்ப மழையாயிரங்கியெனை ...
　　வாழ்விப்பதுன் பரங்காண் ...
பொல்லாதசேயெனிற் றாய்தள்ளனீதமோ ...
　　புகலிடம் பிறிதுமுண்டோ ...
பொய்வார்த்தைசொல்லிலோ திருவருட்கயலுமாய்ப்
　　புன்மையே னாவனந்தோ ... ...
சொல்லான்முழக்கிலோ சுகமில்லைமௌனியாய்ச் ....
　　சும்மா விருக்கவருளாய் ... ...

சுத்தநிற்குணமான பரதெய்வமேபராஞ் ... ...*
சோதியேசுகவாரியே ... .. ...(௫)
என்பெலாநெக்குடைய ரோமஞ்சிலிர்ப்பவுட... ...*
விளகமன தழலின்மெழுகா ... *
யிடையறாதுருகவரு மழைபோலிரங்கியே ... *
யிருவிழிக ணீரிறைப்ப ... ... *
வன்பினுன்மூர்ச்சித்த வன்பருக்கங்ஙனே ... *
பயிர்தசஞ் சீவிபோல்வந் ... ...*
தானந்தமழைபொழிவை யுள்ளன்பிலாதவெனை ... *
யார்க்காக வடிமைகொண்டாய் ... *
புன்புலான்மயிர்தோ னரம்பென்புமொய்த்திடு ...*
புலைக்குடிலி லருவருப்புப் ... ..*
பொய்யல்லவேயிதனை மெய்யென்றுநம்பியென்... *
புந்திசெலுமோ பாழிலே ... ...*
துன்பமாயலையவோ வுலகநடையெய்யவொரு... *
சொற்பனத் திலும்வேண்டிலேன் ... *
சுத்தநிற்குணமான பரதெய்வமேபராஞ் ... ...*
சோதியே சுகவாரியே ... ... (௬)

வெந்நீர்பொறுதெனுடல் காலின்மூட்டைக்கவும் ... *
வெடுக்கென் றசைத்தெடுத்தால் ... *
விழியிமைத்தங்ஙனே தன்னருளைநாடுவேன் ... *
வேறொன்றை யொருவர்சொல்லி ... *
னந்நேரமையோவென் முகவாடிநிற்பதுவு ...*
மையநின் னருளறியுமே ... ... *
யானுமெத்தப் பயந்தவனியானென்னை ... *
யாண்டநீ கைவிடாதே .. ... *
யிந்நேரமென்றிலை யுடற்சுமையதாகவு... ... *
மெடுத்தா லிறக்கவென்றே ... *
யெங்கெங்குமொருதீர்வை யாயமுண்டாயினு ...*
மிறைஞ்சுசுக ராதியான ... ... *
தொன்னீர்மையாளர்க்கு மாணிடம்வகுத்தவரு ...*
டுணையென்று நம்புகின்றேன் ... *
சுத்தநிற்குணமான பரதெய்வமேபராஞ் ... *
சோதியே சுகவாரியே ... ...(௭)

பற்றுவனவற்றிடு நிராசையென்றொருபூமி ...*
பற்றிப்பிடிக்கு மியோகப் ... *
பாக்கிற்பிராணலய மென்றுமொருபூமியினை ... *
பற்றின்மன மறுமென்னவே ... *

கற்றையஞ்சடைமௌனி தானேகனிந்தகனி ...*
கனிவிக்க வந்தகனிபோற் ... ... *
கண்டதிந்நெறியெனத் திருவுளக்கனிவினொடு ... *
கனிவாய்திறந்து மொன்றைப் ... *
பெற்றவனுமல்லேன் பெருந்தவனுமல்லேன் ... *
பெருக்கத்த வித்துளநியே ... ...☆
பெண்ணீர்மையென்னவிரு கண்ணீரிறைந்துநான் ...☆
பேய்போ லிருக்கவுலகஞ் ... ...*
சுற்றிநகைசெய்யவே யலையவிட்டாயெனிற் ... ☆
சொல்லவினி வாயுமுண்டோ ... ☆
சுத்தநிற்குணமான பரதெய்வமேபரஞ் ... *
சோதியே சுகவாரியே ... ...(௬)

அரும்பொனேமணியே யெனன்பேயெனன்பான ...*
வறிவேயெ னறிவிலூறு ... ... ☆
மானந்தவெள்ளமே யென்னென்றுபாடினே ...☆
னாடினே னாடிநாடி ... ... *
விரும்பியேகூவினே னலறினேனலறினேன் ...☆
மெய்சிலிர்த் திருகைகூப்பி ... *
விண்மாரியெனவெனிரு கண்மாரிபெய்யவே ...*
வேசற்றயர்ந்தேனியா ... ... *
விரும்புநேர்நெஞ்சகக் கள்வனாலுமுனை ...*
யிடைவிட்டு நின்றதுண்டோ ... ☆
வென்றுநீயன்றுநா னுன்னடிமையல்லவோ ...*
யாதேனு மறியாவெறுந் .. ... *
துரும்பனேனென்னினுங் கைவிடுதனீதியோ ...*
தொண்டரொடு கூட்டுகண்டாய் ... *
சுத்தநிற்குணமான பரதெய்வமேபரஞ் ... *
சோதியே சுகவாரியே ... ... (௭)

பாராதியண்டங்க ளத்தனையும்வைக்கின்ற ...*
பரவெளியி லுண்மைகாட்டிப் ... *
பற்றுமனவெளிகாட்டி மனவெளியினிற்றோய்ந்த ...*
பாவியேன் பரிசுகாட்டித் ... ...*
தாராளமாய்நிற்க நிச்சிந்தைகாட்டிச் ... *
சதாகால நிட்டையெனவே ... ...☆
சகசநிலைகாட்டினை சுகாதீதநிலயந் ... ... *
தனைக்காட்ட நாள்செலலுமோ ... ...*
காராரவெண்ணரு மனந்தகோடிகளின்று ...☆
காலூன்றி மழைபொழிதல்போற் ... *

நால்விசிமின்னிப் படர்ந்துபரவெளியெல்லாங்........ *
கம்பியா னந்தவெள்ளஞ் ... ... *
சோராதுபொழியவே கருணையின்முழங்கியே........ *
தொண்டரைக் கூவுமுகிலே ... *
சுத்தநிற்குணமான பரதெய்வமேபரஞ் ... *
சோதியே சுகவாரியே ... ... (அ)

பேதித்தசமயமோ வொன்றுசொனபடியொன்று ... *
பேசாது றுறவாகியே ... ... *
பேசாதபெரியோர்க ணிருவிகற்பத்தினாற் ... ... *
பேசார்கள் பரமகுருவாய்ப் ... *
போதிக்குமுக்கணிறை நேர்மையாய்க்கைக்கொள்ள *
போதிப்ப தாச்சறிவிலே ... ... *
போக்குவரவறவின்ப நீக்கமறவசனமாப் ... *
போதிப்ப தெவரையனே ... ... *
சாதித்தசாதனமு மியோகியர்களமதென்று ... ... *
சங்கிப்ப ராதலாலே ... ... *
தன்னிலேதானு மயர்ந்துவிடுமோமெனத் .. *
தனியிருந் தடிணங்குமே ... ... *
சோதிக்கமனமாயை தனையேவிகுலடிமை ... ... *
சுகமாவ தெப்படிசொலாய் ... *
சுத்தநிற்குணமான பரதெய்வமேபரஞ் ... *
சோதியே சுகவாரியே ... ... (௯)

அண்டமுடிதன்னிலோ பகிரண்டமதனிலோ ... *
வலரிமண்டல நடுவிலோ ... ... *
வனநடுவிலோவமிர்தமதி நடுவிலோவன்ப ... ... *
ரகமுருகி மலர்கடுக்கித் ... ... *
தென்னடமிடவருமூர்த்தி நிலையிலோதிக்குத் ... *
திகந்தத்திலோ வெளியிலோ ... *
திகழ்விந்துநாதவிலை தன்னிலோவேதாந்த ... *
சித்தாந்த நிலைதன்னிலோ ... ... *
கண்டபல்பொருளிலோ காணாதநிலையனைக் ... *
கண்டசூனிய மதனிலோ ... ... *
காலமொருமூன்றிலோ பிறவினிலைதன்னிலோ ... *
கருவிகரணங்க ளோய்ந்த ... ... *
தொண்டர்களிடத்திலோ நீவீற்றிருப்பது ... ... *
தொழும்பனேற் குளவுபுகலாய் ... *
சுத்தநிற்குணமான பரதெய்வமேபரஞ் ... *
சோதியே சுகவாரியே ... ... (௰)

எந்தநாள்கருணைக் குரித்தாளுநாளெனவு ... *
  மென்னிதய மெனவாட்டுதே ... *
பேதென்றுசொல்லுவேன் முன்னொடுபின்மலைவறவு *
  மிற்றைவரை யாதுபெற்றேன் ... *
பந்தமானதிவிட்ட மெழுகாகியுள்ளம் ... ...*
  பதைத்துப் பதைத்துருகவோ ... *
பரமசுகமாவது பொறுப்பரியதுரியமாய்ப் ... *
  பலகாலு மூர்ச்சிப்பதோ ... ...*
நிந்தையானதுமறிவை யென்னறிவிலறிவான ... *
  தெய்வநீ யன்றியுளதோ ... ... *
தேகநிலையல்லவே யுடைகப்பல்கப்பலாய்த் ... ...*
  திரையாழி யூடுசெலுமோ ... ...*
சொந்தமாயண்டநீ யறியார்கள்போலவே ... *
  துன்பத்திலாழ்த்தன் முறையோ ... *
சுத்தநிற்குணமான பரதெய்வமேபராஞ் ... *
  சோதியே சுகவாரியே ... (௰௧)

எந்நாளுமுடலிலே யுயிராமுனைப்போ ... ...*
  லிருக்கவிலையோ மனமேதனு ... ...*
மியானுமென்னட்பாம் பிராணனுமெமைச்சடம .. *
  தென்றுனைச் சித்தென்றுமே ... *
யந்நாளிலெவனோ பிரித்தானதைக்கேட்ட ... *
  வன்றுமுதலின்றுவரையு ... ...*
மநியாயமாயெமை யடக்கிக்குறுக்கே ... *
  யடர்ந்தரசு பண்ணியெங்கள் ... *
முன்னாகநீயென்ன கோட்டைகொண்டாயென்று ... *
  மூடமன மிகவுமேச ... ... *
மூண்டெரியுமனவிட்ட மெழுகாயுளங்கருகன் ... *
  முறைமையோ பதிலுயிரஞ் ... *
சொன்னாலுநின்னருளிரங்கவிலையேயினிச் ... *
  சுகம்வருவதெப்படிசொலாய் ... ...*
சுத்தநிற்குணமான பரதெய்வமேபராஞ் ... *
  சோதியே சுகவாரியே ... ... (௰௨)

சுகவாரி - முற்றிற்று - ஆக-அஅ.



# எங்குநிறைகின்றபொருள்.

அவனன்றியோரணுவுமசை யாதெனும்பெரிய ...
வாப்தர்மொழி யொன்றுகண்டா ...
லறிவாவதேதுசில வறியாமையேதிவை ...
யறிந்தார்க ளறியார்களார் ... ...
மௌனமொ டிருந்ததா ரென்போலுடம்பெலாம் ...
வாயாய்ப்பிதற்று மவரார் ... ...
மனதெனவுமொருமாயை யெங்கேயிருந்துவரும் ...
வன்மையொ டிரக்கமெங்கே ... ...
புவனம்படைப்பதென் கர்த்தவ்யமெவ்விடம் ...
பூதபேதங்க ளெவ்விடம் ... ...
பொய்மெயிதமகிதமேல் வருநன்மைதீமையொடு ...
பொறைபொறுமையு மெய்விட ... ...
மெவர்சிறியரெவர்பெரிய ரெவருறவரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ ...
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ...
யெங்குநிறை கின்றபொருளே ... ...(க)

அன்னையனையெனுஞ் சிலசமயநின்னையே ...
யையாவையா வென்னவே ... ...
யலறிடுஞ்சிலசமய மல்லாதுபேய்போல ...
வலறியே யொன்றுமிலவாய்ப் ... ...
பின்னேதுமறியாம லொன்றைவிட்டொன்றைப் ...
பிதற்றிடுஞ் சிலசமயமேற் ... ...
பேசரியவொளியென்றும் வெளியென்றுநாதாதி......
பிறவுமே நிலயமென்றுந் ... ...
தன்னைநிலாததோ ரணுவென்றுமூவிதத் ...
தன்மையாங் காலமென்றுஞ் ...
சாற்றிடுஞ்சிலசமய மிவையாகிவேறதாய்ச் ...
சதாஞான வானந்தமா ... ...
யென்னையெனைக்கருணை விளையாட்டிருத்தவா ...
றெம்மனோர் புகலவெளிதோ ...
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ...
யெங்குநிறை கின்றபொருளே ... (உ)

வேதமுடனாகம புராணமிதிகாசமுதல் ...
வேறுமுள கலைகளெல்லா ... ...
மிக்காகவத்துவித துவிதமார்க்கத்தையே ... ...
விரிவா யெடுத்துரைக்கு ... ...
மோதரிய துவிதமே யத்துவிதஞானத்தை ...
யுண்டுபண்ணு ஞானமாகு ... ...

ஏகமனுபவவசன மூன்றுக்குமொவ்வுமீ ...
துபயவாதிகள் சம்மத ... ...
மாதவிலெனக்கினிச்சரியையாதிகள்போது ...
மியாதொன்று பாவிக்கநா ...
னதுவாதலாலுன்னை நானென்றுபாவிக்கி ...
னத்துவித மார்க்கமுறலா ... ...
மேதுபாவித்திடினு மதுவாகிவந்தருள்செ ...
யெந்தைநீ குறையுமுண்டோ ...
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ...
யெங்குநிறை கின்றபொருளே ... ...(௧

சொல்லானதிற்சற்றும் வாராதபிள்ளையைத் ...
தொட்டில்வைத்தாட்டியாட்டித் ...
துடையிணைக்கிள்ளல்போற் சங்கற்பமொன்றிற் ...
றெடுக்குந் தொடுத்தழிக்கும் ... ...
பொல்லாதவாதனை யெனுஞ்சப்தபூமியிடை ... ...
போந்துதலை சுற்றியாடும் ... ...
புருஷனிலடங்காத பூவைபோற்றுனே ...
புறம்போந்து சஞ்சரிக்குங் ...
கல்லோடிரும்புக்கு மிகவன்மைகாட்டிடுங் ... ...
காணுது கேட்டவெல்லாங் ... ...
கண்டதாக்காட்டியே யணுவாச்சுருக்கிடுங் ...
கபடநாடக சாலமோ ... ...
வெல்லாமும்வல்லிந்த மனமாயையேழையா ...
மென்னு லடக்கவசமோ ... ...
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ... ...
யெங்குநிறை கின்றபொருளே ... (௨

கண்ணாரநீர்மல்கி யுள்ளநெக்குருகாத ...
கள்ளனே னுனுமோ ... ...
கைகுவித்தாடியும் பாடியும்விடாமலே ...
கண்பனித் தாரைகாட்டி ... ...
யன்னுபாஞ்சோதி யப்பாவுனக்கடிமை ...
யானெனவு மேலெழுந்த ... ...
வன்பாகிநாடக நடித்ததோகுறைவில்லை ...
யகிலமுஞ் சிறிதறியுமேத் ... ...
தன்னுருநின்னதரு ளறியாததல்லவே ...
சற்றேனு மினிதிரங்கிச் ... ...
சாசுவதமுத்திநிலை யீதென்றுணர்த்தியே ...
[illegible] ... ...

றெண்ணமதுள்ளபடி சுகமாயிருக்கவே ... *
யேழையேற் கருள்செய்கண்டா ... ... *
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ... *
யெங்குநிறைகின்றபொருளே ... (௫)

க்கமானதுகோடி கூடுகின்றாலுமொரு ... *
கல்வின்முன் னெதிராநிற்குமோ ... *
கர்மமானதுகோடி முன் னைசெய்தாலுநின் ... *
கருணைப்ரவாகவருளைத் ... ... *
தாகமாய்நாடினரை வர்த்திக்கவல்லதோ... ... *
தமியனேற் கருட்டாகமோ ... ... *
ச்சற்றுமிலையென்பதுவும் வெளியாச்சுவினையெலாஞ்... *
சங்கேத மாய்க்கூடியே ... ... *
தேகமானதைமிகவும் வாட்டுதேதுன்பங்கள் ... *
சேராமல் யோகமார்க்க ... ... *
சித்திபோவரவில்லை சகசநிஷ்டைக்குமென் ... *
சிந்தைக்குரும் வெகுதூரநா ... ... *
னேகமாய்நின்றே டிருகருநாளெந்தநா ... *
ளிந்தாளு முற்றுறுதோ ... .... *
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ... *
யெங்குநிறை கின்றபொருளே ... (௬)

ஒருமைமனதாகியே யல்லறநின்னருளி ... *
லொருவனுன் வந்திருக்கி ... ... *
னுலகம்பொருததோ மாயாவிசித்ரமென ... *
வோயுமோ விடமில்லையோ ... *
வருளுடையநின்னன்பர் சங்கைசெய்திடுவரோ ... *
வலதுகிர்த் தியகர்த்தரா ... ... *
யகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சில ... *
ரடாதென்ப ரோகைன்ற ... ... *
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள் ... *
பேய்க்கோல மாய்விதண்டை ... ... *
பேசுமோவலதுதான் பரிபாககாலம் ... ... *
பிறக்கவில்லையோ தொல்லையா ... ... *
மிருமைசெறிசடவினை யெதித்துவாய்பேசுமோ ... *
வேதுளவ சிறிதுபுகலா ... ... *
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ... *
யெங்குநிறை கின்றபொருளே ... (௭)
நில்லாதுதேகமெனு நினைவுண்டுதேகநிலை ... *
நின்றிடவு மௌனியாகி... *

நேரேயுபாயமொன் றருளினையையோவினை ...
நின்றனுட் டிக்கவென்றுந் ... ...
கல்லாதமனமோ வொடுங்கியுபாதிபெறக் ...
காணவில்லை யாகையாலே... ... ...
கைபேற்றனும்புசிப் பொவ்வாதநாளுமுன் ...
காட்சியி லிருந்துகொண்டு ...
வல்லாளராரியம நியமாதிமேற்கொண்ட ...
மாதவர்க் கேவல்செய்து... ... ..
மனதின்படிக்கெலாஞ்சித்தி பெறலாஞானம் ...
வாய்க்குமொரு மனுவெனக்கிங்... ...
இல்லாமையொன்றினையு மில்லாமையாகவே ..
யிப்போ திரங்குகண்டா ... ...
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ...
யெங்குநிறை கின்றபொருளே ... (அ

மரவுரியுடுத்துமலை வனநெற்கொறித்துமுதிர் ...
வனசருகு வாயில்வந்தால் ... ...
வன்பசிதவிர்த்துமனல் வெயிலாதிமழையால் ...
வருந்தியும் மூலவனலைச் ... ...
சிரமளவெழுப்பியு நீரினிடைமூழ்கியுந் ...
தேகநம தல்லவென்று... ... ...
சிற்சுகவபேக்ஷையாய் நின்னன்பர்யோகஞ் ...
செலுத்தினு ரியாம்பாவியேன் ...
விரவுமறுசுவையினொடு வேண்டுவபுசித்தணையில் ..
வேண்டுவ வெலாமுடுத்தி ... ...
மேடைமாளிகையாதி வீட்டினிடைவைகியே ...
யேதொரு வருத்தமின்றி... ...
யிரவுபகலேழையர்கள் சையோகமாயினே ...
மெய்ப்படி யிழைப்பதுனையா ...
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி ....
யெங்குநிறை கின்றபொருளே ... (

முத்தனையமூரலும் பவளவாயின்சொலு ...
மோகத்திலகு பசுமஞ்சளு ... ...
மூர்ச்சிக்கவிரகசன் னதமேற்றவிருகும்ப ...
முலையின்மணி மாலைநால ... ...
வைத்தெமைமயக்கியிரு கண்வலையைவீசியே ..
மாயா விலாசமோக ... ...
வாரிதியிலாழ்த்திடும் பாழானசிற்றிடை ...

புத்தமிர்தபோகம் புசித்துவிழியிமையாத... ... ✻
பொன்னாட்டும் வந்ததென்றால் .. ... ... ✻
போராட்ட மல்லவோ பேரின்ப முத்தியிப் ... ... ✻
பூமியி லிருந்துகாண... ... ... ...✻
வெத்தனை விகாதம்வரு மென்றநுகர் சென்றநெறி ... ✻
யிவ்வுலக மறியாததோ ... ... ... ✻
யிகபர மிரண்டிலு முயிரினுக் குயிராகி ......✻
யெங்குநிறை கின்றபொருளே... ... ...(௰)

உன்னிலையு மென்னிலையு மொருநிலை யெனக்கிடத் ... ✻
துளறிடு மவத்தையாகி ... ... ... ✻
யுருவுதான் காட்டாத வாணவமு மொளிகண்... ... ✻
டொளிக்கின்ற விருளென்னவே .. .. ... ✻
தன்னிலைமை காட்டா தொருங்கருவி வினையினாற் ....✻
றாவுசுக துக்கவேலை ... ... ... ... ✻
தட்டழிய முற்றுமில் லாமாயை யதனாற் ... ... ✻
றடித்தநில பேதமான ... ... ... ✻
முன்னிலை யொழிந்திட வகண்டிதா காரமாய் ... ✻
மூதறிவு மேலுதிப்ப... ... ... ...✻
முன்பின்னுடு கீழ்மே னடுப்பக்க மென்னுமன் ...✻
முற்றுமா னந்தநிறைவே ... ... ...✻
யென்னிலைமையாய்நிற்க வியல்புகூ ரருள்வடிவ ... ✻
மெந்நாளும் வாழிவாழி ... ... ✻
யிகபரமிரண்டிலு முயிரினுக்குயிராகி ... ✻
யெங்குநிறை கின்றபொருளே ... (௰௧)

எங்குநிறைகின்றபொருள் - முற்றிற்று. ஆ - ௩௩.

---

# ச ச் சி தா ன ந் த சி வ ம்.

---

பாராதிகளனைப் பரப்புமுண்டோவென்று ... ✻
படர்வெளிய தாகியெழுநாப் ... ✻
பரிதிமதிகாணுச் சுயஞ்சோதியாயண்ட ... ✻
பகிரண்ட வுயிரொவைக்கு ... ...✻
நேராகவறிவா யகண்டமாயேகமாய் ... ✻
நித்தமாய் நிர்த்தொந்தமாய் ... ✻
நிர்க்குண விலாசமாய் வாக்குமனமணுகாத ... ✻
நிர்ம்மலா னந்தமயமாய்ப் ... ... ✻
போராதுநிற்றிநீ சும்மாவிருந்துதான் ... ✻
பேரின்ப மெய்திடாமற் ... ... ✻

பேய்மனதையண்டியே தாயிலாப்பிள்ளைபோற் ... ...
பித்தாகவோ மனதைநான் ... ...
சாராதபடியறிவி னிருவிகற்பாங்கமாகு ...
சாசுவத நிஷ்டையருளாய் ... ...
சர்வபரிபூரண வகண்டதத்துவமான ...
சச்சிதா னந்தசிவமே ... ... (௬)

குடக்கொடிகுணக்காதி திக்கினையுமக்கூடு ...
கொள்ளல்போ லேந்துபூதங் ...
கூடுஞ்சுருங்கிலச் சாலோகமொன்பது ....
குலாவுநடை மனையைநாளும் ...
வடக்கயிறுவெண்ணரம் பாவென்புதசையினன் ...
மதவேள்வி மாநடத்த ... ...
வைக்கின்றகைத்தோ வெண்ணீர்செநீர்கணீர் ...
மலநீர்பு ணீரிறைக்கும் ... ...
விடக்குத்துருத்தியைக் கருமருந்துக்கூட்டை ...
வெட்டவெட்டத் தறிக்கும் ...
வேட்கைமாமுறுகின்ற சுடுகாட்டைவிடிவிலே ...
மெய்போலிருந்து பொய்யாகு ... ...
சடக்கைச்சடக்கெனச் சதமென்றுசின்மயந் ... ...
தானுகி நிற்பதென்றே ... ...
சர்வபரிபூரணவகண்டதத் துவமான ...
சச்சிதா னந்தசிவமே ... ... (௭

பாகத்தினுற்கவிதை பாடிப்படிக்கவோ ...
பத்திநெறி யில்லைவேத ...
பாராயணப்பணுவன் மூவர்செய்பணுவலது ... ...
பகரவோ விசையுமிலலை ... ...
யோகத்திலேசிறிது முயலவென்றாற்றேக ...
மொவ்வாதி னுண்வெறுத்தா ... ...
லுயிர் வெறுத்திடமலாக்கு மல்லாதுகிரியைக ...
ளுபாயத்தினுற் செய்யவோ ...
மோகத்திலேசிறிது மொழியவிலைமெய்ஞ்ஞான ... ...
மோனசத்தி னிற்கவென்றால் ... ...
முற்றுதுபரிபாக சத்திகளனேகநின் ...
மூதறிவிலே
தாகத்திலேவாய்க்கு மயிர்த்பிர ... ...
தன்னந்தனிப் பெருமையே மே ...
சர்வபரிபூரண வகண்டதத்துவமான ...
சச்சிதானந்த சிவமே ... ... (

இமையளவுபோதையொரு கற்பகாலம்பண்ணி .. *
    யிவ்வுலக மெவ்வுலகமோ ... .. *
வென்றெண்ணமருவிக்கு மாதர்சிற்றின்பமோ... . *
    வென்னின்மக மேருவாக்கிச் ... *
சுமைபெறுமிதென்றுதான் சும்மாடுமாயெமைச் ... *
    சுமையாளு மாக்கினாலுந் ... ... *
தூர்ப்புத்திபண்ணிபுள நற்புத்தியாவையுங் ... *
    குறையிட் டிந்த்ரசால... ... ...*
மமையவொருகூத்துஞ் சமைந்தாடுமனமாயை ... *
    யம்மம்ம வெல்லவெளிதோ ... *
வருள்பெற்றபேர்க்கெலா மொளிபெற்றுநிற்குமீ ...*
    தருளோ வலாதுமருளோ ... ...*
சமயநெறிகாணாத சாக்ஷிநீசூக்ஷ்மமாத் ... *
    தமியனேற் குளவுபுகலாய் ... ...*
சர்வபரிபூரண வகண்டதத்துவமான ... *
    சச்சிதா னந்தசிவமே... ... ... (௪)

இனியேதெமக்குனருள் வருமோவெனக்கருதி ...*
    யேங்குதே நெஞ்சமையோ ... *
வின்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பரென் ... *
    றெண்ணவோ திடமில்லையே ... *
யனியாயமாயிந்த வுடலைநாமென்றுவரு ... *
    மந்தகற் காளாகவோ ... ... *
வாடித்திருந்துநான் கற்றதுங்கேட்டது ... *
    மவலமாய்ப் போதனன்றோ, ... *
தனியேனும்வறிய செங்காயேனுமுதிர்சருகு ... *
    கந்தமூலங்க ளேனுங்... ... ... *
கனல்வாதைவந்தெய்தி னள்ளிப்புசித்துநான் ... *
    கண்மூடி மௌனியாகித் ... ... *
தனியேயிருப்பதற் கெண்ணினேனெண்ணமிது ...*
    சாமிநீ யறியாததோ ... ... *
சர்வபரிபூரண வகண்டதத்துவமான ... *
    சச்சிதா னந்தசிவமே .. ... (௫)

மத்தயதகரிமுகிற் குலமென்னநின்றிலகு ... *
    வாயிலுடன் மதியகடுதோய் ... *
மாடகூடச்சிகர மொய்த்தசந்த்ரகாந்த ... *
    மணிமேடை யுச்சிமீது ... ... *
முத்தமிழ்முழக்கமுடன் முத்தநகையார்களொடு ... *
    முத்துமுத்தாய்க் குலாவி ... ... *

மோகத்திருந்துமென் போகத்தினிலைநின்று ... *
மூச்சைப் பிடித்தடைத்துக் ... *
கைத்தலநகைப்படை விரித்தபுலிசிங்கமொடு ... *
காடுநுழை நூழைகொண்ட ... *
கானமலையுச்சியிற் குகையூடிருந்துமென் ... *
காதலா மலகமென்னச் ... ... *
சத்தமறமோனநிலை பெற்றவர்களுய்வர்காண் *
சனகாதி துணிவிதன்றோ ... ... *
சர்வபரிபூரண வகண்டதத்துமான ... ... *
சச்சிதானந்த சிவமே ... ... (௯)

கைத்தலம்விளங்குமொரு நெல்லியங்கனியெனக் .. *
கண்டவே தாகமத்தின் ... ... *
காட்சிபுருஷார்த்தமதின் மாட்சிபெறுமுத்தியது ... *
கருதினது மானமாதி ... ... *
யுத்திபலவாதிரு விகற்பமேலில்லையா ... *
லொன்றோ டிரண்டென்னவோ... ... *
வுரையுமிலைநீயுமிலை நானுமிலையென்பது... ... *
முபாயநீ யுண்டுநானுஞ் ... ... *
சித்தமுளநானில்லை யெனும்வசனநீயறிவை ... *
தெரியார்க டெரியவசமோ ... *
செப்புசேவலநீதி யொப்புவமையல்லவே ... *
சின்முத்தி ராங்கமாயிற் ... ... *
சுத்தமறவெனையாண்ட குருமௌனிகையினாற் ... *
றமியனேற் குதவுபொருளே ... *
சர்வபரிபூரண வகண்டதத்துவமான... ... *
சச்சிதா னந்தசிவமே... ... ...(௰

காயாதமரமீது கல்லேறுசெல்லுமோ ... *
கடவுணீ யாங்களடியேங் ... ... *
கர்மபந்தத்தினுற் சன்மபந்தம்பெறக் ... *
கற்பித்த துன்னதருளே... ... ... *
வாயாரவுண்டபேர் வாழ்த்துவதுநொந்தபேர் ... *
வைவது வுமெங்களுலக ... ... *
வாய்பாடுநிற்கநின் வைதிகவொழுங்குநினை ... *
வாழ்த்தினுற் பெறுபேறுதா ... *
ஞேயாதுபெறுவதொன முறையிட்டதாற்பின்ன ... *
ருளறுவது கருமமன்று ... ... *
மூபயநெறியிதென்னி னுசிதநெறியெந்தநெறி ... *
யுலகிலே பிழைபொறுக்குந் ... *

தாயானகருணைபுருனைக்குண்டெனக்கினிச் ... ✲
சஞ்சலங்கெட வருள்செய்வாய் ... ✲
சர்வபரிபூரண் வகண்டதத்துவமான ... ... ✲
சச்சிதானந்தசிவமே ... ... (அ)

இன்னம்பிறப்பதற் கிடமென்னினிவ்வுடல ... ✲
மிறவா திருப்பமூலத்... ... ... ✲
தெழுமங்கியமிர்தொழுகு மதிமண்டலத்திலுற ✲
வென்னம்மை குண்டலினிபாற் ... ... ✲
பின்னம்பிறக்காது சேயெனவளர்த்திடப் ... ✲
பேயேனை நல்கவேண்டும் ... ... ✲
பிறவாதநெறியெனக் குண்டென்னினிம்மையே ... ✲
பேசுகற் பூரதீப ... ... ✲
மின்னும்படிக்ககண் டாகாரவன்னைபால் ... ✲
வினையேனை யொப்புவித்து ... ✲
வீட்டுநெறிகூட்டிடுதல் மிகவுநின்றிலையன்றி ... ✲
விவகார முண்டென்னிலோ ... ✲
தன்னந்தனிச்சிறிய னாற்றிலேன்போற்றிவளர் ... ✲
சன்மார்க்க முத்திமுதலே ... .. ✲
சர்வபரிபூரண வகண்டதத்துவமான ... ✲
சச்சிதானந்தசிவமே ... ... (௯)

வேதாவையிவ்வணம் விதித்ததேதென்னினுன் ... ✲
வினைப்பகுதி யென்பனந்த ... ✲
வினைபேசவறியாது நிற்கவிலைமனதால் ... ✲
விளைந்ததான் மனதைநாடிற் ... ✲
போதமேநிற்குமப் போதத்தைநாடிலோ... ... ✲
போதமுனி நூல்விளக்கம்... ... ✲
பொய்யன்றுதெய்வமறை யாவுமேநீயென்று ... ✲
போக்குவர வறநிகழ்ந்து ... ... ✲
மாதாரவாதேய முழுதுநீயாதலா ... ✲
லகிலமீ தென்னையாட்டி ... ... ✲
யாடல்கண்டவனுநீ யாடுகின்றவனுநீ ... ✲
யருளுநீ மௌனகுரு ... ... ✲
தாதாவுநீபெற்ற தாய்தந்தைதானுநீ ... ✲
தமருநீ யாவுநீகாண் ... ... ✲
சர்வபரிபூரண வகண்டதத்துவமான ... ... ✲
சச்சிதானந்தசிவமே ... ... (௰)
கொத்தவிழ்மலர்ச்சோலை நன்னிழல்வைகினுங் ... ✲
குளிர்தீம் புனற்கையள்ளிக் ... ... ✲

கொள்ளுகினுமந்நீ ரிடைத்திளைத்தாடினுங்... ...*
குளிர்சந்த வாடைமடவார் ... ... *
வந்துலவுகின்றதெனமுன்றிலிடையுலவவே ... *
வசதிபெறு போதும்வெள்ளை *
வட்டமதிபட்டப் பகற்போலநிலவுதர ... *
மகிழ்போதும் வேலையமுதம் ... *
விந்தைபெறவறுசுவையில் வந்ததெனவமுதுண்ணும் *
வேளையிலும் மாலைகந்தம் ... ..*
வெள்ளிலைபடக்காய் விரும்பிவேண்டியவண்ணம்.....*
விளையாடி விழிதுயிலினுஞ் ... *
சந்ததமுநின்னருளை மறவாவரந்தந்து ... *
தமியேனை ரக்ஷைபுரிவாய் ... ... *
சர்வபரிபூரண வகண்டதத்துவமான ... *
* சச்சிதா னந்தசிவமே ... ... (௰௧)

சச்சிதானந்தசிவம் - முற்றுப்பெற்றது- ஆ - ாம.

# தேசோமயானந்தம்.

மருமலர்ச்சோலைசெறி நன்னீழன்மலையாதி ... *
மன்னுமுனிவர்க் கேவலாய் ... ... *
மந்த்ரமாலிகைசொல்லு மியமநியமாதியா ...*
மார்க்கத்தி னின்றுகொண்டு ... *
கருமருவுகாயத்தை நிர்மலமதாகவே ... *
கமலாச னாதிசேர்த்துக் ... ... *
காலைப்பிடித்தனலை யம்மைகுண்டலியடிக் ... *
கலைமதியி னூடுதாக்கி ... ... *
யுருகிவருமமிர்தத்தை யுண்டுண்டுறங்காம .....*
லுணர்வான விழியைநாடி ... ...*
யொன்றேடிரண்டெனாச் சமரசசொரூபசுக ...
முற்றிடவென் மனதின்வண்ணந்... ...
திருவருண்முடிக்கவித் தேகமொடுகாண்பனோ ...
தேடரிய சத்தாகியென் ... ...
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ...
தேசோ மயானந்தமே ... ... (

இப்பிறவியெனுமோ ரிருட்கடலின்மூழ்கிநா ..
னென்னுமொரு மகரவாய்ப்பட் ...
டிருவினையெனுந்திரையி னெற்றுண்டுபுற்புத ...
வெனக்கொங்கை வரிசைகாட்டுந் ...

துப்பிதழ்மடந்தையர் மயற்கண்டமாருதச் ... *
சுழல்வந்து வந்தடிப்பச் ... ... *
சோராதவாசைபாங் காறுறுவானதி ... ... *
சுரந்தெனமேலுமார்ப்பக் ... *
கைப்பரிசுகாசர்போ லறிவானவங்கமுங் ... *
கைவிட்டு மதிமயங்கிக் ... ... *
கள்ளவங்கக்காலர் வருவரென்றஞ்சியே ... *
கண்ணருவி காட்டுமெளியேன் ... *
செப்பரியமூர்த்தியாங் சுனைசேரவுங்கருணை ... *
செய்வையோ சத்தாகியென் ... *
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ... *
தேசோ மயானந்தமே ... ... (௨)

தந்தைதாய்தமர்தார மகவென்னுமிவையெலாஞ் ... ... *
சந்தையிற்கூட்டமிதிலோ ... ... *
சந்தேகமில்லைமணி மாடமாளிகைமேடை ... ... *
சதுரங்க சேனையுடனே ... ... *
வந்ததோர்வாழ்வுமோரிந்த்ரசாலக்கோலம் ... *
வஞ்சனைபொறாமை லோபம் ... *
வைத்தமனமாங்கிருமி சேர்ந்தமலபாண்டமோ ..... *
வாஞ்சனையி லாதகனவே ... ... *
வெந்தநாளுஞ்சரி யெனத்தேர்ந்துதேர்ந்துமே... ... *
யிரவுபக லில்லாவிடத் ... ... *
தேகமாய்நின்றநின் னருள்வெள்ளமீதிலே ... *
யானென்ப தறவுமூழ்கிச் ... ... *
சிந்தைதான்தெளியாது சுழலும்வகையென்சொலோ *
தேடரிய சத்தாகியென் ... *
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ... *
தேசோ மயானந்தமே ... ... (௩)

ஆடாமலோய்ந்திட்ட பம்பரம்போல்வினை ... *
யடங்கிமனம் வீழநேரோ ... ... *
யதியானமயாகின்ற விருளகலவிருளொளியு ... *
மல்லாதிருந்தவெளிபோற் ... *
கோடாதெனைக்கண் டெனக்குணிறைசார்ந்தவெளி ... *
கூடியின் பாதிதமுங் ... ... *
கூடினேனேசரியை கிரியையின்முயன்றுநெறி ... *
கூடினேனே வல்லனிபா ... ... *
வீடாகவேயாறு வீட்டினிரம்பியே ... *
[illegible]

யிருந்திடியினைக்கட்டி யோகபரனாகாம ... ...
லேழைக்குடும்ப னாகித் ... ...
தேடாதழிக்கவொரு மதிவந்ததென்கொலோ .....
தேடரிய சத்தாகியென் ... ...
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ...
தேசோ மயானந்தமே ... ... (௪)

பாடாதுபாடிப் படித்தளவில்சமயமும் ...
பஞ்சுபடு சொல்லனிவனைப் ... ...
பார்மினோபார்மினோ தென்றுசபைகூடவும் ...
பரமார்த்த மிதுவென்னவே ...
யாடாதுமாடிநெஞ் சுருகிநெக்காடவே ...
யமலமே யேகமேயெம் ... ...
மாதியேசோதியே யெங்குநிறைகடவுளே ...
யரசேயெனக் கூவிநான் ... ...
வாடாதுவாடுமென் முகவாட்டமுங்கண்டு ...
வாடாவெனக் கருணைநீ ... ...
வைத்திடாவண்ணமே சங்கேதமாவிந்த ...
வன்மையை வளர்ப்பித்ததார் ...
தேடாதுதேடுவோர் தேட்டற்றதேட்டமே ...
தேடரிய சத்தாகியென் .. ...
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ...
தேசோ மயானந்தமே ... ... (௫

பிரியாததண்ணருட் சிவஞானியாய்வந்து ...
பேசரிய வாசியாலே ... ...
பேரின்பவுண்மையை யளித்தனையென்மனதறப் ...
பேரம் பலக்கடவுளா ... ... ...
யறிவாயிருந்திடு நாதவொலிகாட்டியே ...
யமிர்தப்ர வாகசித்தி ... ...
யருளினையலாதுதிரு வம்பலமுமாகியெனை ...
யாண்டனையி னெய்திநெறியாய்க் ... ...
குறிதானளித்தனைநன் மாவுரிகொளந்தனைக்
கோலமா யசபாநலங் ... ...
கூறினபின்மௌனியாய்ச் சும்மாவிருக்கநெறி ...
கூட்டினை யெலாமிருக்கச் ... ..
சிறியேன்மயங்கிமிக வறிவின்மையாவனோ ...
தேடரிய சத்தாகியென் ... ...
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே. ...
தேசோ மயானந்தமே ... ...

ஆராரெனக்கென்ன போதித்துமென்னவென் ... ✻
னறிவினை மயக்கவசமோ ... ... ✻
வண்டகோடிகளெலாங் கருப்பவறைபோலவு ... ✻
மடுக்கடுக் காவமைத்துப் ... ... ✻
போமறின்றபர வெளியிலேமணவெளி ... ✻
பிறங்குவ தலாதொன்றினும் ... ✻
பின்னமுறமருவாது நன்னயத்தாலினிப் .. ✻
பேரின்ப முத்திநிலையுந் ... ... ✻
தாராதுதள்ளவும் போகாதுனலைது ... ✻
தள்ளினும் போகேணியான் ... ... ✻
நடையேதுமில்லையாண் டவனடிமையென்றுமிரு .. ✻
தன்மையிலு மென்வழக்குத் ... ✻
தீராதுவிடுவதிலை நமவானகடவுளே... ... ✻
தேடரிய சத்தாகியென் .. ... ... ✻
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ... ✻
தேசோ மயானந்தமே ... ... (எ)

கந்துகமதக்கரியை வசமாநடத்தலாங் ... ... ✻
கரடிவெம் புலிவாயையுங் ... ... ✻
கட்டலாமொருசிங்க முதுகின்மேற்கொள்ளலாங் ... ✻
கட்செவி யெடுத்தாட்டலாம் ... ✻
வெந்தழலினிரதம்வைத் தைந்துலோகத்தையும் ... ✻
வேதித்து விற்றுண்ணலாம் ... ✻
வேறொருவர்காணாம லுலகத்துலாவலாம் ... ✻
விண்ணவரை யேவல்கொளலாஞ் ... ... ✻
சந்ததமுமிளமையோ டிருக்கலாமற்றொரு ... ✻
சரீரத்தினும் புகுதலாஞ் ... ... ✻
சலமேனடக்கலாங் கனன்மேலிருக்கலாந் ... ✻
தன்னிகரில் சித்திபெறலாஞ் ... ✻
சிந்தையையடக்கியே சும்மாவிருக்கின்ற ... ✻
திறமரிது சத்தாகியென் ... ... ✻
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ... ✻
தேசோ மயானந்தமே ... ...(அ)

எல்லாமறிந்தவரு மேதுமறியாதவரு ... ✻
மில்லையெனு மிவ்வுலகமீ ... ... ✻
தேதுமறியாதவ னெனப்பெயர்தரித்துமிக .. ✻
வேழைக்கு ளேழையாகிக் ... ... ✻
கல்லாதவறிவிற் கடைப்பட்டநானன்று ... ✻
னையிறு லுண்மைஞானங் ... ... ✻

கற்பித்தநின்னரு ளினுக்கென்னைம்மாறு ... *
காட்டுவேன் குற்றேவலா... .. ...*
னல்லார்த்தமேனியொடு குண்டுகட்பிறையெயிற்... *
றுபாச வடிவமான ... ... *
வந்தகாநீயொரு பகட்டாற்பகட்டுவ... ... *
தடாதடா காகுநம்பாற் .. ... ...*
செல்லாதடாவென்று பேசவாயனுதந்த ... *
செல்வமே சத்தாகியென் ... ... *
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே *
தேசோ மயானந்தமே ... .. (௬)

மின்போலு மிடையொடியு மொடியுமென மொழிதல்
மென்கலம் பொலிசௌரிப்ப ... [போன்
வீக்கிப்புடைத்துவிழ் சுமையன்னகொங்கைமட ...*
மின்னார்கள் பின்னேலா ... ... *
லென்போலலைந்தவர்கள் கற்றார்கள்கல்லார்க ... *
ளிருவர்களி லொருவருண்டோ ... *
வென்செய்கேனம்மம்ம வென்பாவமென்கொடுமை *
யெதென் றெடுத்துமொழிவே ... *
னன்பால்வியத்துருகி யடியற்றமரமென்ன ...*
வடியிலே வீழ்ந்துவீழ்ந்தெம் ... *
மடிகளேயுமதடிமை யாங்களென றுநால்வருக் ... *
கறமாதி பொருளுரைப்பத் ... *
தென்பாலின்முகமாகி யடவாலிருக்கின்ற ... *
செல்வமே சத்தாகியென் ... ... *
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே ... *
தேசோ மயானந்தமே ... ... (௭)

புத்தமிர்தபோகமுங் கற்பகநனீழலிற் ... *
பொலிவுற விருக்குமியல்பும் ... *
பொன்னுலகிலயிரா வதத்தேறுவரிசையும் ... *
பூமண்ட லாதிக்கமு ... ... *
மத்தமெறியினர்வேண்டு மாலென் றுதள்ளவுமெ ...*
மாலுமொரு சுட்டுமறவே ... ...*
வைக்கின்றவைப்பாளன் மௌனதேசிகனென்ன ... *
வந்தநின் னருள்வாழிகாண் ... ...*
சுத்தபரிபூரண வகண்டமேயேகமே ... *
சுருதிமுடி வானபொருளே ... *
சொல்லரியவுயிரினிடை யங்கங்குநின் றருள் ... *
சுரந்துபொழி கருணைமுகிலே ... *

சித்தநிலைமுத்திநிலை விளங்கின்றபூமியே ... *
தேடரிய சத்தாகியுன் ... ... ... *
சித்தயிலைசகுடிகொண்ட வறிவானதெய்வமே ... *
தேசோமயானந்தமே ... ...(௰௧)

தேசோமயானந்தம் - முற்றுப்பெற்றது - ஆக - ௱௨௧.

## சிற்சுகோதயவிலாசம்.

காகமொடுகழுகலகை நாய்நரிகள் ... *
சற்றுசேர் றிடுதுருத்தியைக் ... *
காலிரண்டுநவ வாசல்பெற்றுவளர் ... ... *
காமவேணடன சாலையை ... ... *
மோகவாசைமுறி யிட்டபெட்டியைமு ... *
மலமிகுந்தொழுகு கேணியை ... *
மொய்த்துவெப்பிருமி தத்துரும்பியை ... *
முடங்கலார்குடை சரக்கியை ... *
மாகவிந்த்ரஜா லயினையொத்திலக ... *
வேதமோதிய குலாலனார் ... ... *
வனையவெய்யதடி காரனாயமன் ... *
வந்தடிக்குமொரு மட்கலத் ... *
தேகமானபொலைய மெய்யெனக்கருதி ... *
யையமையபிசை வாடவோ ... *
தெரிவதற்கரிய பிரமமேயமல ... ... *
சிற்சுகோதய விலாசமே ... ...(௧)
குறிகளோடுகுண மேதுமின்றியனை ... *
லொழுகநின்றிடி மிருப்பனைத் ... *
கூடலின்றியது வாயிருந்தபடி ... ... *
கொடியவாணவ மறைக்குளே ... *
யறிவதேதுமற வறிவிலாமையமய ... *
மாயிருக்குமெய்யை யருளினு ... *
ளளவிலாததனு காணமாதியை ... ... *
யளித்தபோதுமை யறிந்துநான் ... *
பிறிவிலாதவனை நின்றிடாதபடி ... ... *
பெலநிறங்கவரு மூமலமாய்ப் ... *
பெரியமாயையி லழுந்தநின்னது ... *
ப்ரசாதமல்லருள் மறந்திடுந் ... *
சிறியனேனுமுனை வந்தணைந்துசுக ... .. *
மாயிருப்பதினி யென்றுகாண் ... *

தெரிவதற்கரிய பிரமமேயமல ... ... *
சிற்சுகோதய விலாசமே ... ... (௨)

ஐந்துபூதமொரு கானனீரென ... ... *
வடங்கவந்தபெரு வானமே ... ... *
யாதியந்தநடு வேறுமின்றியரு ... ... *
ளாய்நிறைந்திலகு சோதியே ... *
தோந்தரூபமுட னரூபமாகுறி ... *
குணமிறந்துவளர் வஸ்துவே ... *
துரியமேதுரிய வுயிரினுக்குணர்வு ... *
தோன்றநின்றருள் சுபாவமே ... *
யெந்தநாளுநடு வாகிநின்றொளிரு ... *
மாதியேகருணை நிதியே ... ... *
யெந்தையேயென விடைந்திடைந்துருகு ... ... *
மெளியனேன்கவலை தீரவுந் ... ... ... *
சிந்தையானதை யறிந்துநீயுனருள் ... ... ... *
செய்யநாளுமினி யுய்வனோ ... ... *
தெரிவதற்கரிய பிரமமேயமல .. ... ... *
சிற்சுகோதய விலாசமே ... ... ...(௩)

ஐவரொன்றபுல வேடர்கோட்டம ... ... *
டங்கமர்க்கடவன் மூட்டியா ... ... *
யடவிநின்றுமலை யருகினின்றுசரு ... ... *
காதிநின்றுபனி வெயிலினேன் ... ... *
மெய்வருந்துதவ மில்லைநற்சரியை ... ... *
கிரியையோகமெனு மூன்றதாய் ... ... *
மேவுகின்றசவு பானநன்னெறி... ... ... *
விரும்பவில்லையுல கத்திலே ... ... *
பொய்முடங்குதொழில் யாகதற்குநல ... ... *
சாதித்தொழி னடத்திடும்... ... ... *
புத்திபூகமறி வற்றமூகமிவை ... ... ... *
பொருளெனக்கருது மருளன்யான் ... *
றெய்வநல்லருள் படைத்தவன்பரொடு ... ... *
சேரவுங்கருணை கூர்வையோ ... ... ... *
தெரிவதற்கரிய பிரமமேயமல ... ... *
சிற்சுகோதய விலாசமே ... ... ... (௪

ஏகமானவுரு வானநீயருளி ... ...
னூலனேகவுரு வாகியே ... ...
யெந்தநாளகில கோடிசிருஷ்டிசெய ... ...
விசையதாள்வரைய நாண்முதல் ... ... ...

லாகநாளது வரைக்குமுன்னடிமை ... ...*
கூடவேசனன மானதோ ... ...*
வனந்தமுண்டுதல சனனமீதிதனு ... *
ளறியவேண்டுவன வறியலா ... ...*
மோகமாதிதரு பாசமானதை ... ... *
யறிந்துவிட்டுனையு மெனையுமே ... *
முழுதுணர்ந்துபர மானவின்பவெள ... *
ளமிழ்கவேண்டுமிது வின்றியே ... ...*
தேகமேநழுவி நானும்மாதழுவின் ... *
பின்னையுய்யும்வகை யுள்ளதோ ... *
தெரிவதற்கரிய பிரமமேயமல ... ... *
சிற்சுகோதயவிலாசமே ... ...(௫)

நியமலக்ஷணமு மியமலக்ஷணமு ... *
மாசனாதிவித பேதமு ... ... *
நெடிதுணர்ந்திதய பத்மபீடமிசை ... *
நின்றிலங்குமச பானலந் ... ... *
தியலறிந்துவளர் மூலகுண்டலியை ... *
யினிதிறைஞ்சியவ ளருளினா ... *
லெல்லையற்றுவளர் சோதிமூலவன ... *
லெங்கள்மோனமது முறையிலே ... *
வயமிகுந்துவரு மமிர்தமண்டல ... ...*
மதிக்குளேமதியை வைத்துநான் ... *
வாய்மடுத்தமிர்த வாரியைப்பருகி ... *
மன்னுமாரமித வடிவமாய்ச் ... *
செயமிகுந்துவரு சித்தயோகநிலை ... *
பெற்றுஞானநெறி யடைவனோ ... *
தெரிவதற்கரிய பிரமமேயமல ... ...*
சிற்சுகோதய விலாசமே ... (௬)

எறிதிரைக்கட லிகர்த்தசெல்வமிக ... *
வலலெலன்றொருவர் பின்செலா ... *
தில்லையென்றுமுறை பேசிடாதுலகி ... *
லெவருமாமென மதிக்கவே ... *
நெறியின்வைகிவளர் செல்வமும்முதவி ... *
நோய்களற்றசுக வாழ்க்கையாய் — *
நியமமாதிநிலைநின்றஞானநெறி ... ...*
நிஷ்டைகூடவுமெந் நாளுமே ... *
யறிவினின்றகுரு வாயுணர்த்தியது ... *
மன்றிமோனகுரு வாகியே ... ..*

யகிலமீதுவர வந்தசிரருளை ... ...
யையவையவினி யென்சொல்கேன் ...
சிறியனேனைமநம தடிமையென்றனது ...
திருவுளத்தினி லிருந்ததோ ... ...
தெரிவதற்கரிய பிரமமேயமல ... ...
சித்சுகோதய விலாசமே ... ...(எ

எவ்வுயிர்த்திரளு முலகிலென்னுயி ... ...
ரெனக்குழைந்துருகி நன்மையா ...
யிதமுரைப்பவென தென்றயானையு ...
மெமீத்தெறிந்துமத யானைபோற் ...
கவ்வையற்றநடை பயிலவன்பரடி ...
கண்டதேவருளின் வடிவமாக் ...
கண்டயானையு மகண்டமென்னவிரு ...
கைகுவித்துமலர் தூவியே ... ..
பவ்வவெண்டிரை கொடுத்ததண்டரளம் ...
விழியுதிர்ப்பமொழி குளறியே ...
பாடியாடியு ளுடைந்துடைந்தெழுது ...
பாவையொத்தசைத லின்றியே ... ...
திவ்யவன்புருவ மாகியன்பரொடு ... ...
மின்பவீட்டினி லிருப்பதோ ...
தெரிவதற்கரிய பிரமமேயமல ... ..
சித்சுகோதய விலாசமே ... (அ

மத்தர்பேயரொடு பாலர்தன்மையது ... ...
மருவியேதுரிய வடிவமாய் ... .
மன்னுதேசமொடு காலமாதியை ...
மறந்துநின்னடியாடியிலே ...
பத்தியாய்நெடிதுநம்புமென்னையொரு ...
மையறந்தகிலமாயையைப் ... ...
பாருபாரொனநடத்தவந்தென ... ...
பாரதத்தினுமிதுள்ளதோ ... ...
சுத்தநித்தவியல்பாருமோவுனது ... ..
விசுவமாயைநடுவாகவே ... ...
சொல்லவேணும்வகைநல்லகாதிகதை ...
சொல்லுமாயையினு மில்லையென் .....
சித்தமிப்படிமயங்குமோவருளை ... ...
நம்பினோர்கள்பெறுபேறிதோ ...
தெரிவதற்கரியபிரமமேயமல ... ...
சித்சுகோதயவிலாசமே ... ... ... (

பன்முகச்சமயநெறி படைத்தவரு ... *
 மியாங்களே கடவுளென்றிடும் ... *
பாதகத்தவரும் வாததர்க்கமிடு ... ... *
 படிறருந்தலை வணங்கிடத் ... ... *
தன்முகத்திலுயிர் வரவழைக்குமெம ... ✡
 தருமனும்பகடு மேய்க்கியாய்த் ... *
தனியிருப்பவட நீழலூடுவளர் ... ... *
 சனகனாதிமுனி வோர்கடங்கு... ... *
சொன்மயக்கமிது தீரவங்கைகொடு ... *
 மோனஞானம துணர்த்தியே ... ... *
சுத்தநித்தவரு ளியல்பதாகவுள ... ... *
 சோமசேகர கிர்பானுவாய்த் ... *
தென்முகத்தின் முகமாயிருந்தகோனை ... *
 வெம்முகத்தினும் வணங்குவேன் ... ✡
தெரிவதற்கரிய பிரமமேயமல ... ... *
 சிற்சுகோதயவிலாசமே ... ... (௰)

சிற்சுகோதயவிலாச - முற்றுப்பெற்றது - ஆக - ௱௩௰௧.

## ஆகாரபுவனம் - சிதம்பரரகசியம்.

ஆகாரபுவன மின்பாகாரமாக ... ... *
 வங்ஙனேயொருமொழியா லகண்டாகார ... ✡
யோகானுபூதிபெற்ற வன்பரால்விக் ... *
 குறுதுணையேயென்னவு முகந்தரட்டே ... *
வாயாரும்படிக்கசைகின்ற கிளிவாயென்ன ... *
 மலர்ந்தமலரிடைவாசம் வயங்குமாபோற் ... ✡
றேகாதியுலகமெங்குங் கலந்துதானே ... *
 நிகழனந்தானந்தமயத் தெய்வக்குன்றே (௧)
அனந்தபதவுயிர்கடொறு முயிராயென்று ... *
 மானந்தநிலையாதி யளவைக்கெட்டாத் ... *
தனந்தனிச்சின்மாத்திரமாய்க் கீழ்மேல்காட்டாச் ... *
 சதசத்தாயருட்கோயிற் றழைத்ததேவே ... *
யினம்பிரிந்தமான்போலு னிடையாவண்ண ... ✡
 மின்பமுறவன்பர்பக்க லிருத்திவைத்துக்... *
கனந்தருமாகனமேதன் னருளிற்றேனே ... *
 கனிபலித்தவானந்தக் கட்டிப்பேறே ... (௨)
பேறனைத்துமனுவெனவே யுதறித்தள்ளப் ... *
 பேரின்பமாகவந்த பெருக்கேபேசா ... *

வீறனைத்துமுந்நெறிக்கே யென்னவென்னை ... *
மேவென்றவரத்தேபாழ் வெய்யமாயைக் .. ...*
கூறனைத்துங்கடந்தவெல்லைச் சேடமாகிக் ... ☆
குறைவறநின்றிநிறைவே குலவாநின்ற ...
வாறனைத்தும்புகுங்கடல்போற் சமயகோடி... ...☆
யத்தனையுந்தொடர்ந்துபுகு மாதிநட்டே ...(கூ)

ஆதியந்தமெனுமெழுவா யீறற்றொன்றி ... ☆
யருமறையின்னமுங் காணுதாற்றநாளு
பேதமதங்களு மலைமலைபோல்வாதப் ...
பெற்றியரும்வாய்வாதப் பேயராகச் ...
சாதகமோனத்திலென்ன வடவானீழற் ...
றன்னருட்சந்திர மௌனிதடக்கைக்கேற்க...
வேதகசின்மாத்திரமா யெம்மனோர்க்கும் ...
வெளியாகவந்தவொன்றே விமலமாம்வே (சா
விமலமுதற்குணமாகி நூற்றெட்டாதி ...
வேதமெடுத்தெடுத்துரைத்த விருத்திக்கேற்க...
வமையுமிலக்கண வடிவாயதுவும்போதா ...
தப்பாலுக்கப்பாலா யருட்கண்ணுகிச் ...
சமமுடன்கலப்புமவிழ் தனுமியாங்காணத் ...
தண்ணருடந்தெம்மக்காக்குஞ்சாக்ஷிப்பேறே...
யிமையளவுமுபகாரமல்லால்வேறொன் ... ...
றியக்காநிர்க்குணக்கடலா யிருந்தவொன்றே ...((
ஒன்றாகிப்பலவாகிப்பலவுங்கண்ட ... ...
வொளியாகிவெளியாகியுருவுமாகி... ... ..
நன்றாகித்தீதாகிமற்றுமாகி ... ... ...
நாசமுடனுற்பத்திநண்ணுதாகி ... ...
யின்றாகிநாளையுமாய்மேலுமான ... ...
வெந்தையேயெம்மானேயென்றென்றேங்கிக்..
கன்றாகிக்கதறினர்க்குச்சேதாவாகிக் ... ...
கடிதினில்வந்தருள்கூருங்கருணைவிண்ணே ... (

அருள்பழுத்தபழச்சுவையேகரும்பேதேனே ..
யாரமிர்தேயென்கண்ணேயரியவான ...
பொருளனைத்துந்தரும்பொருளேகருணைநீங்காப் ...
பூரணமாய்நின்றவொன்றேபுனிதவாழ்வே ...
கருதரியகருத்ததனுட்கழித்தாய்மேவிக் ...
காலமுந்தேசமும்வகுத்துக்கருவியாதி ...
விரவினையுங்கூட்டியுயிர்த்திரளைபாட்டும் ... ...[(
விழுப்பொருளேயான்சொலும் விண்ணப்பங்

விண்ணவரிந்திரன்முதலோர் நாரதாதி ... *
விளங்குசப்தரிஷிகள்கண வீணைவல்லோ ... *
ரெண்ணரியசித்தர்மனு வாதிவேந்த ... ...*
ரிருக்காதிமறைமுனிவ ரெல்லாமிந்தக் ... .. *
கண்ணகன்ஞாலம்மதிக்கத் தானேயுள்ளங் ... *
கையினெல்லிக் கனிபோலக்காட்சியாகத் ... *
திண்ணியநல்லறியாலிச் சமயத்தன்றே ... *
செப்பரியசித்திமுத்தி சேர்ந்தாரென்றும் .. (அ)

செப்பரியசமயநெறி யெல்லாந்தன்றன் ... *
தெய்வமேதெய்வமெனுஞ் செயற்கையான ... *
வப்பரிசாளருமஃதே பிடித்தாலிப்பா ... .. *
லடுத்ததந்நூல்களும்விரித்தே யனுமானாதி ...*
யொப்பவிரித்துரைப்பரிங்ஙன் பொய்மெய்யென்ன *
வொன்றிலையொன் றெனப்பார்ப்பதொவ்வாதார்க்
யிப்பரிசாஞ்சமயமுமா யல்லவாகி ... [கு
யாதுசமயமும்வணங்கு மியல்பதாகி ... (கூ)

இயல்பென்றுந்திரியாம லியமமாகி ... *
யென்குணமுங் காட்டியன்பாலின்பமாகிப்......*
பயனருளப்பொருள்கள்பரி வாரமாகிப் ... *
பண்பறவுஞ்சௌபான பக்ஷங்காட்டி ...*
மயலறுமந்திரஞ்சிக்ஷை சோதிடாதி ... *
மற்றங்கநூல்வணங்க மௌனமோலி ... ...*
யபர்வறச்சென்னியில்வைத்து ராசாங்கத்தி ... *
லமர்ந்ததுவைதிகசைவ மழகிதந்தோ ... (ய)

அந்தோவீததிசயமிச் சமயம்போலின் ... *
றறிஞரெல்லாநடுவறிய வணிமாவாதி ... *
வந்தாடித்திரிபவர்களும் பேசாமோனம் ... *
வைத்திருந்தமாதவர்க்கு மற்றுமற்று ... *
மிந்த்ராதிபோகநலம் பெற்றபேர்க்கு ... *
மிதுவன்றிதாயகம்வே றில்லையில்லை ... *
சந்தானகற்பகம்போ லருளைக்காட்டத் ... *
தக்கநெறியிந்நெறியே தான்சன்மார்க்கம்...(யக)

சன்மார்க்கஞானமதின் பொருளும்வீறு ... *
சமயசங்கேதப்பொருளுந் தானொன்றாகப் ... *
பன்மார்க்கநெறியினிலுங் கண்டதில்லை ... *
பகர்வரியதில்லைமன்றுட் பார்த்தபோதங் ... *
கென்மார்க்கமிருக்குதெல்லாம் வெளியேயென்ன ... *

ளெச்சமயத்தவர்களும்வந் திறைஞ்சாநிற்பர் ...
கன்மார்க்கநெஞ்சமுளா யெனக்குந்தாமே ...
கண்டவுடனானந்தங் காண்டலாகும் ... (௰௨)

காண்டஸ்பெறப்புறத்திலுள்ள படியேயுள்ளுங் ... ...
காட்சிமெய்நூல் சொலும்பதியாங்கடவுளேநீ ..
நீண்டநெடுமையுமகலக் குறுகக்காட்டா ...
நிறைபரிபூரண வறியாய்நித்தமாகி ...
வேண்டுவிருப்பொடுவெறுப்புச் சமீபந்தூரம் ...
விலகலணுகுதன்முதலாம் விவகாரங்கள் ...
பூண்டவல்லவைகண்மனவாக் காதியெலலாம் ...
பொருந்தாமலகம்புறமும் புணர்க்கையாகி (௰௩)

ஆகியசற்காரியவு சத்துக்கேற்ற ... ...
வமலமாய்நடுவாகி யனந்தசத்தி ...
யோகமுறுமானந்த மயமதாகி ... ...
யுயிர்க்குயிராயெந்நாளு மோங்காநிற்ப ...
மோகவிருண்மாயைவினை யுயிர்கட்கெல்லா ...
மொய்த்தவிதன்கோ ளுபகாரமுயர்ச்சியாகப் ...
பாகமிகவருளவொரு சத்திவந்து ... [௰௪
பதிந்தவிதன்கொளுனெனுமப்பான்மையென்கோ

நாவெனனுமோரகந்தை யெவர்க்கும்வந்து ...
நலிந்தவுடன் சகமாயைநாளுவாகித் ...
தான்வந்துதொடருமித்தால் வளருந்தண்டச்
சாகரத்தின்பெருமையெவர் சாற்றவல்லா ...
ரூனென்றுமுடலென்றுங் கரணமென்று ...
முள்ளென்றும்புறமென்று மொழியாநின்ற ...
வானென்றுங்காலென்றுந் தீநீரென்று ...
மண்ணென்றுமலையென்றும்வனமதென்றும் ௰௫

மலைமலையாங்காட்சிகண்கா ணுமையாதி ...
மறப்பென்றுநினைப்பென்றுமாயாவாரி ...
யலையலையாயடிக்குமின்ப துன்பமென்று ...
மதைவிளக்குவினைகளென்று மதனைத்தீர்க்கத்...
தலைபலவாஞ்சமயமென்றுந் தெய்வமென்றுஞ் ...
சாதகமென்றும்மதற்குச்சாக்ஷியாகக் ...
கலைபலவாநெறியென்றுந் தர்க்கமென்றுங் ...
கடலுறநுண்மணலெண்ணிக்காணும்போதும். ௰௬
காணரியவல்லவெல்லாந் தானேகட்டுக் ...
கட்டாகவினையுமதைக் கட்டோடேதான் ...

பாராயோ வென்றுயர மெல்லாமையா ... ... ...
பகருமுன்னே தெரியாதோ பாவியேன்முன் ...
வாராயோ வின்னமொரு காலானாலு ... ...
மலர்க்காலென் சென்னிமிசை வைத்திடாயோ (௪)

வைத்திடுங்காலைப்பிடித்துக் கண்ணின்மார்பில் ...
வைத்தணைத்துக்கொண்டுகையால் வளைத்துக்கட்டிச்
சித்தமிசைப்புகவிருத்திப் பிடித்திக்கொண்டு ... [ல்
தியக்கமறவின்பசுகஞ் சேர்வதென்றோ ... (௫)

சோராமற்சிற்றினத்தைப் பிரித்தெந்நாளுந் ... ...
திருவடிப்பேரினத்துடனே சேரவண்ணல் ...
மாராக நானலைந்தே னரசேநீகா ... ...
ணறிந்திருந்துமாயையிலே னழுந்தவைத்தாய் (௬)

வைத்தபொருளுடலாவி மூன்றுநின்கை ...
வசமென்றேயான்கொடுக்க வாங்கிக்கொண்டு ..
சித்தமிசைப்புகுந்ததுதான் மெய்யோபொய்யோ...
சிறியேற்கிங்குளவுரையாய் திகையாவண்ணம்...(௭)

திகையாதோவெந்நாளும் பேரானந்தத் ...
தெள்ளமுதமுதவாமற் றிவலைகாட்டி ... ...
வகையாகவலக்கழித்தா யுண்டுடுத்து ...
வாழ்ந்தேனிரண்டுகான் மாடுபோலே.....(௮)

மாடுமக்கள்சிற்றிடையார் செம்பொனுடை ... ...
வைத்தகனதனமேடை மாடகூடம் ...
வீடுமென்பாற்றொடர்ச்சியோ விடைவிடாமல் ....
மிக்ககதிவீடன்றோ விளங்கல்வேண்டும் ... (௯)

விளங்கவெனக்குள்ளுள்ளே விளங்காநின்ற ... ...
வேதகமேபோதகமே விமலவாழ்வே ... ..
களங்கரகிதப்பொருளே யென்னைநீங்காக் ...
கண்ணுதலேநாதாந்தக் காட்சிப்பேறே ... (௰)

நாதமேநாதாந்த வெளியேசுத்த ...
ஞானகுருவேஞானமே ஞேயமேநல் ...
வேதமேவேதமுடி வானமோன ... ...
வித்தேயிங்கென்னையினி விட்டிடாதே ... (௰௧)

பெற்றவட்டே - முற்றுப்பெற்றது - ஆக - கூாஞ.

# கல்லாலின்.

கல்லாலினீழறனி லொருநால்வர்க்குங் ...
　　கடவுணீபுணர்த்துவதுங் கைகாட்டென்றாற்.....
சொல்லாலேசொலப்படுமோ சொல்லுந்தன்மை.....
　　துரும்புபற்றிக்கடல்கடக்குந் துணிபேயன்றோ (௧)

அன்றோவாமோவெனவுஞ் சமயகோடி ...
　　யத்தனையும்வெவ்வேறு யாற்றநேரே ... ...
நின்றேயேநினைப்பெறுமா றெவ்வாறுங்கே ... ...
　　நின்னருள்கொண்டறிவதல்லா னெறிவேறுண்டோ

நெறிபார்க்கினின்னையன்றி யகிலம்வேறு ...
　　நிலநீர்தீக்கால்வானு நீயலாத ... ...
குறியாதுமில்லையென்றால் யாங்கள்வேறே ...
　　கோதையொருகூறுடையாய் கூறாய்கூறாய் ... (௩)

கூறுபவைம்பூதச் சுமையைத்தாங்கிக் ...
　　குணமிலாமனமெனும்பேய்க் குரங்கின்பின்னே
மாறாதகவலையுடன் சுழலவென்னை ...
　　வைத்தனையேபரமேநின் மகிமைநன்றே..... (௪)

நன்றெனவுந்தீதெனவு மெனக்கிங்குண்டோ ...
　　நானுநீயிருந்த நியாயஞ்சற்றே ...
யின்றெனக்குவெளியானா லெல்லாம்வல்ல .. ...
　　விறைவாநின்னடியருட னிருந்துவாழ்வேன்... (௫)

வாழ்வெனவுந்தாழ்வெனவு மிரண்டாப்பேசும் .. ...
　　வையகத்தார்கற்பனையா மயக்கமான ... ...
பாழ்வலையைக்கிழித்துதறிச் செயல்போய்வாழப் ...
　　பரமேநின்னானந்தப் பார்வையெங்கே ... (௬)

எங்கேயெங்கேயருளென் றுமையிரந்தா ...
　　னேழையிவனெனவுமெண்ணி யிச்சைகூறு ...
மங்கேயெங்கேயெளிவந் தென்னையாண்ட ... ...
　　வாரமுதேயுனைக்காண்பா னலந்துபோனேன் (௭)

போனநாட்கிரங்குவதே தொழிலாவிங்ஙன் ... ...
　　பொருந்துநாளத்தனையும் போக்கினேனென் ...
ஞானநாயகனேநின் மோனஞான ...
　　நாட்டமுற்றுவாழ்ந்திருக்கு நாளெந்நாளோ (௮)

நாட்பட்டகமலமென்ன விதயமேவு ...
　　நறுந்தேனேதுன்மார்க்க நாரிமார்கண் ...
வாட்பட்டகாயமிந்தக் காயமென்றே ...
　　வன்கூற்றுமுயிர்பிடிக்க வருமந்நீதி .. (௯)

நீதியெங்கேமறையெங்கே மண்விண்ணெங்கே ... ✿
நித்தியராமவர்களெங்கே நெறியெப்பாத ...❋
சாதியெங்கேயொழுக்கமெங்கே யாங்களெங்கே... ❋
தற்பரநீயின்றுமொன்றைச் சமைப்பதானால் (௰)

ஆறாலும்யானெனவிங் கற்றவெல்லை ... ✿
யதுபோதுமதுகதிதா னல்லவென்று ... ❋
போறாலும்யான்போவ னல்லான்மோனப் ...❋
புண்ணியனேவேறுமொரு பொருளைநாடேன் ()

பொருளேநின்பூரணமே விட்டகாலம் ... ❋
போக்குவரவுண்டோதற் போதமுண்டோ ... ❋
விருடானுண்டோவல்லால் வெளிதானுண்டோ... [டோ
வின்பமுண்டோ துன்பமுண்டோ யாமங்குண்

உண்டோநீபடைத்தவுயிர்த் திரளிலென்போ ...✿
லொருபாவிதேகாதி யுலகம்பொய்யாக் ... ❋
கண்டேயுமெள்ளளவுந் துறவுமின்றிக் ... ❋
காசினிக்குளலைந்தவரார் காட்டாய்தேவே... (௰௧)

தேவரெல்லாந்தொழச்சிவந்த செந்தாண்முகட் ...❋
செங்கரும்பேமொழிக்குமொழி தித்திப்பாக...❋
மூவர்சொலுந்தமிழ்கேட்குந் திருச்செவிக்கே ... ❋
மூடனேன்புலம்பியசொன் முற்றுமோதான் (௰௨)

முற்றுமோவெனக்கினியா னந்தவாழ்வு ... ❋
மூதறிவுக்கிலியாய்நின் மூளரித்தாளிற் ... ❋
பற்றுமோசற்றுமில்லை யையோவையோ ... ❋
பாவிபடுங்கட்கலக்கம் பார்த்திலாயோ ...(௰௩)

பார்த்தனவெல்லாமழியு மதனாற்சுட்டிப் ... ✿
பாராதேபார்த்திருக்கப் பரமேமோன ... ❋
மூர்த்திவடிவாயுணர்த்துங் கைக்காட்டுண்மை ... ❋
முற்றியெனதல்லல்வினை முடியதென்றோ... (௰௪)

என்றுனைநீயன்றளர்யா மென்பதென்னை ...❋
யிதுநிற்கவெல்லாந்தா மில்லையென்றே ✿
பொய்ம்திடச்செய்வல்லவநீ யெமைப்படைக்கும் ...❋
பொற்புடையாமென்னினது பொருந்திடாதே ()

பொருந்துசகமனைத்தினையும் பொய்பொய்யென்று ❋
புகன்றபடிமெய்யென்றே போதரூபத் ...✿
திருந்தபடியென்றிருப்ப தன்றேயன்றோ ... ❋
வெம்பெருமான்யான்கலை யெய்தாக்காலம் (௰௬)

காலமேகாலமொரு மூன்றுங்காட்டுங் ... *
காரணமேகாரணகா ரியங்களில்லாக் ... *
கோலமேயெனவாவா வென்றுகூவிக் ... [லாய்
குறைவறநின்னருள்கொடுத்தாற் குறைவோசொல்

சொல்லாயதகுதியெல்லாங் கடந்துநின்ற ... *
சொரூபானந்தச்சுடரே தொண்டனேனைக் ... *
கல்லாகப்படைத்தாலு மெத்தநன்றே ... *
கரணமுடனுறவு கலக்கமாட்டேன் ...(உ௰)

கலங்காதநெஞ்சுடைய ஞானதீரர் ... *
கடவுளுனைக்காணவே காயமாதி ... *
புலங்காணார்நானொருவன் ஞானம்பேசி ... *
பொய்க்கூடுகாத்ததென்ன புதுமைகண்டாய் (உக)

கண்டிலையோயான்படும்பா டெல்லாமூன்று ... *
கண்ணிருந்துந்தெரியாதோ கசிந்துள்ளன்பார் *
தொண்டரடித்தொண்டனன்றோ கருணைநீங்காச் ... *
சுத்தபரிபூரணமாஞ் சோதிநாதா ...(உஉ)

சோதியாயிருட்பிழம்பைச் சூறையாடுந் ... [தானும்
தூவெளியே யெனைத்தொடர்ந்து தொடர்ந்தெதந்
வாதியாநிற்றவினைப் பகையைவென்ற ... *
வாழ்வேயிங்குனைப்பிரிந்து மயங்குகின்றேன்(உ௩)

மயங்குறுமென்மனமணுகாப் பாதைகாட்டி ... *
வல்வினையைப்பறித்தனையே வாழ்வேதானென்... *
செயக்கடவேன்செயலெல்லா நினதேயென்று ... *
செங்கைகுவிப்பேனல்லாற் செயல்வேறில்லை(உச)

வேறுபடுஞ்சமயமெல்லாம் புகுந்துபார்க்கின் ... *
விளங்குபரம்பொருளேநின் விளையாட்டல்லால் *
மாறுபடுங்கருத்தில்லை முடிவின்மோன ... *
வாரிதியினதித்திரள்போல் வயங்கிற்றம்மா...(உரு)

அம்மாவிதநிசயந்தா னன்றோவன்றோ ... *
வகண்டநிலையாக்கியென்னை யறிவாம்வண்ணஞ் ..*
சும்மாவேயிருக்கவைத்தா யையாவாங்கே ... *
சுகமயமாயிருப்பதல்லாற் சொல்வானென்னே...()

என்னேநான்பிறந்துழல வந்தவாறிங் ... *
கெனக்கெனவோர்செயலிலையே யேழையென்பா
மூன்னேசெய்வினையெனவும் பின்னேவந்து ... [ன்
மூளும்வினையெனவும்வா முறையேயெனந்தாய் ()

தாயானதன்னருளை நிரம்பவைத்துத் ... ✱
தமியேனைப்புரவாமற் றள்ளித்தள்ளிப் ... ✿
போயானதென்கொலையா வேகதேசம் ... *
பூரணத்துக்குண்டோதான் புகலல்வேண்டும் (௨௮)
புகலரியநின்விளையாட் டென்னேயெந்தாய் ... *
புன்மையறிவுடையவென்னைப்பொருளாப்பண்ணி
யிகல்விளைக்குமலமாயை கன்மத்தூடே ... *
யிடருறவுஞ்செய்தனையே யிரக்கமிதோ ...(௨௯)
இரக்கமொழிபொறையீத லறிவாசார ... ✿
மில்லேனுனல்லோர்க ளிட்டங்கண்டாற் ... ✿
கரக்குமியல்புடையேன்பாழ் நெஞ்சமெந்தாய் ... ✿
கருந்தாதோவல்லுருக்கோ கரியகல்லோ... (௩௰)

கல்லாலின் - முற்றுப்பெற்றது - ஆக - ௬௩௫.



# பராபரக்கண்ணி.

சீராருந்தெய்வத் திருவருளாம்பூமிமுதற் ... ...*
பாராதியாண்ட பதியேபராபரமே ... ... (௧)
கண்ணாரக்கண்டோர் கருப்பொருள்காணுமலருள் ...*
விண்ணூடிருந்தவின்ப வெற்பேபராபரமே ... ...(௨)
சிந்தித்தவெல்லாமென் சிந்தையறிந்தேயுதவ ... *
வந்தகருணை மழையேபராபரமே ... ... ... (௩)
ஆராவமுதே யரசேயா னந்தவெள்ளப் .. .. ... *
பேராறேமோனப் பெருக்கேபராபரமே ... ... (௪)
ஆரறிவாரென்னை யனந்தமறையோலமிடும் ... ... ...*
பேரறிவேயின்பப் பெருக்கேபராபரமே ... ... (௫)
உரையிறந்தவன்பருளத் தோங்கொளியாயோங்கிக் ... *
கரையிறந்தவின்பக் கடலேபராபரமே ... ... (௬)
எத்திக்குந்தானாகி யென்னிதயத்தேயூறித்... ... ... *
தித்திக்குமானந்தத் தேனேபராபரமே ... ... (௭)
திக்கொடுகீழ்மேலுந் திருவருளாம்பொற்பறிந்தோர் ... *
கைக்குள்வளர்நெல்லிக் கனியேபராபரமே ... ... (௮)
முத்தேபவளமே மொய்த்தபசும்பொற்சுடரே ... ... *
சித்தேயென்னுள்ளத் தெளிவேபராபரமே ... ... (௯)
கண்ணேகருத்தேயென் கற்பகமேகண்ணிறைந்த ... .. ✿
விண்ணேயானந்த வியப்பேபராபரமே ... ... (௰)

வாக்காய்மனதாய் மனவாக்கிறந்தவர்பாற் ... ... ..*
றூக்காதேதாக்குந் துணியேபராபரமே ... ... ...(யஉ)
பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த்தோன்றவொரு ... *
வார்த்தைசொல்லவந்த மனுவேபராபரமே ... ... (யங)
வானந்தமண்ணினந்தம் வைத்துவைத்துப்பார்க்கவெனக் ... *
கானந்தந்தந்த வரசேபராபரமே ... ... ... (யச)
அன்பைப்பெருக்கியெனை தாருயிரைக்காக்கவந்த ... ... *
வின்பப்பெருக்கே யிறைவேபராபரமே ... ... (யரு)
வானமெல்லாங்கொண்ட மௌனமணிப்பெட்டகத்துக் ... *
கானபணியான வணியேபராபரமே ... ... ...(யசு)
ஓடுமிருநிதியு மொன்றாகக்கண்டவர்க ... ... *
ளூடும்பொருளான நட்பேபராபரமே ... ...(யஎ)
சித்தநினைவுஞ் செயுஞ்செயலுநீயெனவா ... ...*
முத்தமர்கட்கான யுறவேபராபரமே ... ... (யஅ)
போதாந்தப்புண்ணியர்கள் போற்றிசயபோற்றியெனும் .. *
வேதாந்தவீட்டில் விளக்கேபராபரமே ... ... (யகூ)
மூத்தாந்தவீதி மூளரிதொழுமன்பருக்கே ... ... *
சித்தாந்தவீதிவருந் தேவேபராபரமே ... ... (உய)
நனந்தருமுடல மென்னதியானென்பதற ... ...*
வானந்தம்வேண்டி யலந்தேன்பராபரமே ... ... (உக)
என்புருகிநெஞ்ச மிளகிக்கரைந்துகரைந் .. ... ... *
தன்புருவாய்நிற்க வலந்தேன்பராபரமே ... ... (உஉ)
சுத்தவறிவாய்ச் சுகம்பொருந்தினல்லாலென் ... ... *
சித்தந்தெளியாதென் செய்வேன்பராபரமே... ... (உங)
மாறாவனுபூதி வாய்க்கினல்லாலென்மயக்கந் ... ... *
தேறாதென்செய்வேன் சிவமேபராபரமே ... ... (உச)
தாகமறிந்தின்பநிட்டை தாராயேலாகெடுவேன் ... *
றேகம்விழுந்திடினென் செய்வேன்பராபரமே ... (உரு)
அப்பாவென்னைப்பில்வைப்பே யாற்றுகிலேன்போற்றியென்று
செப்புவதல்லால்வேறென் செய்வேன்பராபரமே ...(உசு)
உற்றறியுமென்னறிவு மூட்கருவிபோற்சவிமாண் ... *
டற்றுமின்பந்தந்திலையே யையாபராபரமே ... (உஎ)
சொல்லாலடங்காச் சுகக்கடலில்வாய்மடுக்கி ... ... *
னல்லாலென்றாக மறுமோபராபரமே ... ... (உஅ)
பாராயோவென்னைமுகம் பார்த்தொருகாலென்கவலை ... *
தீராயோவாய்திறந்து செப்பாய்பராபரமே ... (உகூ)
ஓயாதோவென்கவலை யுள்ளேயானந்தவெள்ளம் ... ...*
பாயாதோவையா பகராய்பராபரமே ... ... (ஙய)

ஏகோவுனைப்பிரிந்தா ருள்ளங்கனலில்வைத்த *
பாகோமெழுகோ பகராய்பராபரமே ... ... (௯௰)

கூர்த்தவறிவத்தனையுங் கொள்ளைகொடுத்துன்னருளைப் ... *
பார்த்தவனுமென்னைமுகம் பாராய்பராபரமே ... (௯௧)

கடலமுதேதேனேயென் கண்ணேகவலைப் ... ... *
படமுடியாதென்னைமுகம் பார்நீபராபரமே ... (௯௨)

உள்ளமறிவாயுழைப்பறிவாய் நானேழை ... ... *
தள்ளிவிடின்மெத்தத் தவிப்பேன்பராபரமே ... ...(௯௩)

கன்றினுக்குச்சேதாகனிந்திரங்கல் போலவெனக் ... *
கென்றிரங்குவாய்கருணை யெந்தாய்பராபரமே ... (௯௪)

எண்ணாதவெண்ணமெலா மெண்ணியெண்ணியேழைநெஞ்சம் *
புண்ணாகச்செய்ததினிப் போதும்பராபரமே ... ...(௯௫)

ஆழித்துரும்பெனவே யங்குமிங்குமுன்னடிமை ... *
பாழிற்றிரிவதென்னபாவம் பராபரமே ... ...(௯௬)

கற்றவறிவாலுனைநான் கண்டவன்போற்கூத்தாடிற் ... *
குற்றமென்றென்னெஞ்சே கொதிக்கும்பராபரமே ...(௯௭)

ஐயோவுனைக்காண்பா னாசைகொண்டதத்தனையும் ... *
பொய்யோவெளியாய்ப் புகலாய்பராபரமே ... (௯௮)

துன்பக்கண்ணீரிற் றுளைந்தேற்குன்னானந்த ... ...*
மின்பக்கண்ணீர்வருவ தெந்நாள்பராபரமே ... (௯௯)

வஞ்சனையும்பொய்யுமுள்ளே வைத்தழுக்காறுமுள்ள ...*
நெஞ்சனுக்குமுண்டோ நெறிதான்பராபரமே ... (௱)

பாசம்போய்நின்றவர்போற் பாராட்டியானும் ... *
மோசம்போனேனுன் முறையோபராபரமே ... (௱௧)

நன்றறியேன்தீதறியே னென்றுநின்றவனு ... ...*
மொன்றறியேனேழை யென்னேபராபரமே ... (௱௨)

இன்றுபுதிதன்றே யெளியேன்படுந்துயர ... ... *
மொன்றுமறியாயோ வுரையாய்பராபரமே ... ... (௱௩)

எத்தனைதான்சன்மமெடுத் தெத்தனைநான்பட்டதுய ... *
ரத்தனையுநீயறிந்ததன்றோ பராபரமே ... ... (௱௪)

இந்தநாட்சற்று மிரங்கிலையேற்காலன்வரு ... ... *
மந்தநாட்காக்கவல்லா ரார்காண்பராபரமே ... ... (௱௫)

உற்றுற்றுநாடியுளமருண்ட பாவியைநீ ... ... ... *
சற்றிரங்கியாளத் தகாதோபராபரமே ... ... (௱௬)

எள்ளளவுநின்னைவிடவில்லா வெனைமயக்கிற் ... ...*
றள்ளுதலாலென்னபலன் சாற்றாய்பராபரமே ... (௱௭)

பாடிப்படித்துலகிற் பாராட்டிநிற்பதற்கோ ... ... *
தேடியெனையடிமை சேர்த்தாய்பராபரமே ... ...(௱௮)

சொன்னத்தைச்சொல்வதல்லாற் சொல்லறவென்சொல்லிறதிக் *
கென்னத்தைச்சொல்வே னெளியேன்பராபரமே ... (௪௯)

சொல்லும்பொருளுமற்றுச் சும்மாவிருப்பதற்கே ... *
யல்லும்பகலுமெனக்காசை பராபரமே ... ... (௫௰)

நேசநிருவிகற்பநிட்டையல்லா லுன்னடிமைக் ... ... *
காசையுண்டோநீயறியாதன்றே பராபரமே ... ... (௫௧)

துச்சனெனவேண்டாமித் தொல்லுலகிலல்லல்கண்டா... ... *
லச்சமிகவுடையேனையா பராபரமே ... ... (௫௨)

கன்னுவாரோடுமுனைக் கைகுவியாராயினந்த ... *
மன்னுவார்நட்பைமதியேன் பராபரமே ... (௫௩)

கொல்லாவிரதங்குவலயமெல் லாமோங்க ... ... *
வெல்லார்க்குஞ்சொல்லுவதென் னிச்சைபராபரமே ... (௫௪)

எத்தாற்பிழைப்பபேனோவெந்தையே யின்னருட்கே... ... *
பித்தானேன்மெத்தவுநான் பேதைபராபரமே ... (௫௫)

வாயிருந்தும்பேசா மௌனத்தைவைத்திருந்துந் ... *
தாயிலார்போலுன் றளர்ந்தேன்பராபரமே ... (௫௬)

அன்னையிலாச்சேய்போ லலக்கணுற்றேன்கண்ணா ... *
வென்னகத்திற்றாய்போலிருக்கும் பராபரமே ... ...(௫௭)

உற்றுநினைக்கிற்றுயரமுள்ளுள்ளே செந்தீயாய்ப் ... *
பற்றவெரிந்தேனென்னைமுகம் பார்நீபராபரமே ... ... (௫௮)

பொய்யனிவனென்றுமெள்ளப் போதிப்பார்சொற்கேட்டுக் .. *
கைவிடவும்வேண்டாமென் கண்ணேபராபரமே ... (௫௯)

என்னைமறிந்தேயினைப்பறிந்தே யேழையுய்யும் ... *
வண்ணந்திருக்கருணைவையாய் பராபரமே ... (௬௰)

நாட்டாதேயென்னையொன்றி னாட்டியிதமகிதங் ... *
காட்டாதேயெல்லாநீ கண்டாய்பராபரமே ... (௬௧)

உன்னை நினைந்துன்னிறைவினுள்ளே யுலாவுமென்னை ... *
யன்னவயிற்றின்னமடைக்காதே பராபரமே ... ...(௬௨)

பராமுனக்கென்றெண்ணும் பழக்கமேமாறா ... ... *
வரமெனக்குத்தந்தருளென் வாழ்வேபராபரமே ... ...(௬௩)

வந்தித்துநின்னை மறவாக்கடனைச் ... ... ... *
சிந்திக்கநின்னதருள் செய்யாய்பராபரமே... ... ...(௬௪)

எவ்வுயிருமென்னுயிர்போ லெண்ணியிரக்கவுநின் ... *
றெய்வவருட்கருணை செய்யாய்பராபரமே ... ... (௬௫)

வெட்டவெளிப்பேதையென்பான் வேறுகபடொன்றறியேன் *
சிட்டருடன்சேரனந்த தெண்டன்பராபரமே ... (௬௬)

இரவுபகலற்றவிடத் தேகாந்தயோகம்... ... ... *
வரவுந்திருக்கருணை வையாய்பராபரமே ... ... (௬௭)

மால்காட்டிச்சிந்தை மயங்காமநின்றுசுகக் ... *
கால்காட்டிவாங்காதே கல்லடாய்பராபரமே ... (சு அ)

எப்பொருளுநீயெனவே யெண்ணிநான்றோன்றாத ... *
வைப்பையறிபாதிலையோ வையாய்பராபரமே ... (சுகூ)

சும்மாவிருப்பதுவே சுட்டற்றபூரணமென் ... *
றெம்மாலறிதற் கெளிதோபராபரமே ... ... (எய)

முன்னொடுபின்பக்க முடியடிதாப்பண்ணறநின் ... *
றன்னொடுதானிற்பதென்றோ சாற்றாய்பராபரமே ... (எக)

மைவ்வண்ணந்தீர்ந்த மௌனிசொன்னமெய்வண்ண ... *
மவ்வண்ணநிட்டை யருளாய்பராபரமே ... ... (எஉ)

வித்தன்றியாதும் விளைவதுண்டோவின்னருளாஞ் ... *
சித்தன்றியாங்களுண்டோ செப்பாய்பராபரமே ... (எங)

ஆங்காரமற்றுன் னறிவாளவன்பருக்கே ... ... *
தூங்காததூக்கமது தூக்கும்பராபராபரமே ... (எச)

சிந்தைபலித்தவிழ்ந்து சின்மயமாநின்னடிக்கே ... *
வந்தவர்க்கேயின்பநிலை வாய்க்கும்பராபரமே ... (எரு)

சொல்லாடாவுமனைப்போற் சொல்லிறந்துநீயாகி ... *
னல்லாலெனக்குமுத்தி யாமோபராபரமே ... (எசு)

பேச்சாகாமோனம் பிறவாமுளைத்தெழற் ... *
காச்சாச்சுமேற்பயனுண் டாமோபராபரமே ... ...(எஎ)

கெட்டியெனு முன்னன்பர்மலங் கெட்டயாந்தோர்நூபமையாத் *
தொட்டிலுங்கட்டிச்சேய்போற் றுயின்றார்பராபரமே ... (எஅ)

காட்டவருணிற்கக் காணுதிருமலத்து ... ... *
நாட்டமெனக்குவர னன்றோபராபரமே ... ... (எகூ)

எத்தன்மைக்குற்ற மியற்றிடினுந்தாய்பொறுக்கு ... *
மத்தன்மைநின்னருளு மன்றோபராபரமே ... (அய)

எத்தனையோயாந்தேர்ந்தாலு மென்றுமேலையின்பமுண்டோ ... *
சித்துருவேயிப்பச் சிலம்பயபராபரமே ... ...(அக)

மன்னொருசொல்லின்காட்டி மறைந்துமறைபாவனைக் ... *
கண்ணொருகண்ணாகவென்று காண்பேன்பராபரமே ...(அஉ)

பஞ்சரித்துநின்னைப் பலகாலிரந்ததெல்லா ... *
மஞ்சலெனும்பொருட்டே யன்றோபராபரமே ... (அங)

எங்கெங்கேபார்த்தாலு மெவ்வுயிர்க்குமவ்வுயிரா ... *
யங்கிங்கிருப்பதுநீ யன்றோபராபரமே... ... (அச)

அனைத்துமாய்நின்றாயே யான்வேறுநின்னை ... *
நினைக்குமாறெங்கே நிகழ்த்தாய்பராபரமே ... (அரு)

நின்போதத்தாலே நினைப்புமறப்புமென்று ... *
மென்போதமெங்கே யியம்பாய்பராபரமே ... ...(அசு)

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோர்மனமெல்லாநீ ... ✿
யென்றறிந்தாலெங்கே யியங்கும்பராபரமே ... (அஎ)

கொழுந்தில்வயிரமெனக் கோதறவுள்ளன்பி ... ✿
லழுந்துமவர்க்கேசுக மென் டாகும்பராபரமே ... (அஅ)

பற்றுப்பயிர்க்குப் படர்கொழுந்துபோற்பருவம் ... ✱
பெற்றவர்க்கேநின்னருடான் பேறும்பராபரமே ... (அகூ)

யோகியர்க்கேஞான மொழுங்காம்பேரன்பான ... ✱
தாகியருமேகமுன்னே சார்ந்தோர்பராபரமே ... (கூய)

அல்லும்பகலுமறிவாகி நின்னவர்க்கே ... ✿
சொல்லும்பொருளுஞ் சுமைகாண்பராபரமே ... (கூக)

எச்சிலென்றுபூனை யிசழ்ந்தோர்க்குனைப்போற்றப் ... ✿
பச்சிலையுக்கிள்ளப் படுமோபராபரமே ... (கூஉ)

அந்தக்கரணமடங்கத் துறப்பதுவே ... ✱
யெந்தத்துறவிலுநன் றெந்தாய்பராபரமே ... (கூங)

தன்னையறிந்தாற் றலைவன்மேற்பற்றலது ... ✱
பின்னையொருபற்றுமுண்டோ பேசாய்பராபரமே ... (கூச)

அன்பாற்கரைந்துகண்ணீ ராறுகண்டபுண்ணியருக் ... ✱
குண்டாலவரமுதா யுண்டோபராபரமே ... (கூரு)

தன்னையறிந்தருளே தாரகமாநிற்பதுவே ... ✿
யுன்னையறிதற் குபாயம்பராபரமே ... (கூசா)

கற்றகல்வியாணிலைகான் காணுமோகாண்பதெல்லா ... ✱
மற்றவிடத்தேவெளியா மன்றோபராபரமே ... (கூஎ)

கண்மூடிக்கண்விழித்துக் காண்பதுவன்றோநின்னருளாம் ... ✱
விண்மூடிநெல்லாம் வெளியாம்பராபரமே ... (கூஅ)

நேரேநினதருளென் னெஞ்சக்கவரிசொன்றும் ... ✱
பாரேன்சகமும் படைப்பேன்பராபரமே ... (கூகூ)

வான்காணவேண்டின் மலைமேறலொக்குமுன்னை ... ✱
தான்காணப்பாவனைசெய் நாட்டம்பராபரமே ... (௱)

வாதனைவிட்டுன்னருளின் மன்னினல்லால்வேறுமொரு ... ✱
சாதனைதானுண்டோநீ சாற்றுப்பராபரமே ... (௱க)

பாரகமும்விண்ணகமும் பற்றுகநின்பதருட் ... ✱
பாரதத்தைப்பற்றியன்றோ சாற்றுப்பராபரமே ... (௱உ)

விளக்குந்தகளியையும் வேறென்னார்நின்னைத் ... ✿
துளக்கமறச்சிவனென்று சொல்வார்பராபரமே ... (௱ங)

பாராநின்றாய்ப் பகர்ந்தாலகமெனவு... ... ✿
மாராயுஞ்சிவனுநீ யாங்காண்பராபரமே... ... (௱ச)

பொய்யைப்பொய்யென்றறியும் போதத்துக்காதாவுன் ... ✱
மெய்யருளேயன்றோ விளம்பாய்பராபரமே ... (௱ரு)

வருவான்வந்தேனெனல்போன் மன்னிபழியுஞ்சகத்தைத் ... ௬
தெரிவாகவில்லையென்ற தீரம்பராபரமே ... (௱௬)
மாயாசகமில்லையேன் மற்றெனக்கோர்பற்றுமில்லை ... ௭
நீயேநானென்றுவந்து நிற்பேன்பராபரமே ... (௱௭)
வானுஞானிநீயெனவே வைத்தமறைபொய்யோநீ... ... ௮
தானாகச்சொல்லாதோ சாற்றாய்பராபரமே .. (௱௮)
வெள்ளக்கருணை மதவேழ மாறின்னருட்கெங் ... ௯
கள்ளக்கருத்தே கவளம்பராபரமே ... ... (௱௯)
வண்டாய்த்துவன்றி மௌனமலரணைமேற் ... ௰
கொண்டாற்கோவின்பங் கொடுப்பாய்பராபரமே ... (௱௰)
மாயைமுதலாம்வினைநீ மன்னுயிர்நீமன்னுயிர்தேர் ... ௧
தாயுமறிவானதுநீ யன்றோபராபரமே ... ...(௱௰௧)
என்னறிவும்யானுமென தென்பதுவுமாமிவைக... ... ௨
ணின்னவையேயன்றோ நிகழ்க்காய்பராபரமே ... (௱௰௨)
பாரறியாதண்டப் பரப்பறியாதுன்பெருமை... ... ௩
யாரறிவார்நானோ வறிவேன்பராபரமே ... ... (௱௰௩)
அண்டமனைத்திலுமா யப்பாலுக்கப்பாலுங் ... ௪
கொண்டநின்னையாரறிந்து கொள்வார்பராபரமே ... (௱௰௪)
ஒப்புயர்வொன்றின்றி யொப்புகாமௌனவட்டக் ... ௫
கப்பதுக்காம்வான்பொருணீ யண்டாய்பராபரமே ... (௱௰௫)
என்போலெளியவரு மெங்கெங்கும்பார்த்தாலு ... ௬
முன்போல்வலியவரு முண்டோபராபரமே .. (௱௰௬)
யார்க்கினன்டபிண்டப் பரப்பனைத்துநின்செயலே ... ௭
யார்க்குஞ்செயலில்லையே யையாபராபரமே ... (௱௰௭)
ஒன்றேபலவேயுருவேயருவேயோ ... ... ௮
வென்றேபறைப்பதன்னை யெய்யாபராபரமே ... (௱௰௮)
செப்புவதெல்லாஞ்செபநாஞ் சிந்திப்பதெல்லாநின் ... ௯
றொப்பிறியானமென வோர்ந்தேன்பராபரமே ... (௱௰௯)
ஆரிருந்தென்னார்போயென் னாரமுதாநின்னருளின் ... ௰
சீரிருந்தாலுய்வேன் சிவமேபராபரமே .. ... (௱௨௰)
வஞ்சநமன்வாதனைக்கும் வன்பிறவிவேதனைக்கு ... ௧
மஞ்சியுனையடைந்தே னையாபராபரமே ... (௱௨௰௧)
எந்தப்படியுன்னி தயமிருந்ததெமக் ... ... ... ௨
கந்தப்படிவருவ தன்றோபராபரமே ... ... (௱௨௰௨)
எந்தெந்தநாளுமெனைப் பிரியாதென்னுயிராய்ச் ... ௩
சிந்தைகுடிகொண்டவருட் டேவேபராபரமே ... (௱௨௰௩)
அஞ்சலஞ்சலென்றடிமைக் கப்போதைக்கப்போதே ... ௪
நெஞ்சிலுணர்த்து நிறைவேபராபரமே ... ... (௱௨௰௪)

என்னையுன்றன் கைக்களித்தார் யாவரொன்னையான்கொடுத்துப் ... ✡
பின்னையுன்றற்பெற்றநலம் பேசேன்பராபரமே ... (௱௨௫)

வாய்பேசாவூமையென வைக்கவென்றோநீமௌனத் .. *
தாயாகவந்தருளைத் தந்தாய்பராபரமே ... (௱௨௬)

தன்னைத்தந்தென்னைத் தடுத்தாண்டநின்கருணைக் ..... *
கென்னைக்கொண்டென்னபல னெந்தாய்பராபரமே ... (௱௨௭)

மார்க்கண்டர்க்காக மறலிபட்டபாட்டையுன்னிப் ... *
பார்க்கினன்பர்க்கென்ன பயங்காண்பராபரமே ... (௱௨௮)

கட்டியுணராமற் றுரியநிலையாய்வெளியில் ... ... ✡
விட்டநின்னையாரோ வியப்பேன்பராபரமே ... (௱௨௯)

சூதொன்றுமின்றியுன்னைச் சும்மாவிருக்கவைத்தா ... *
யீதொன்றும்போதாதோ வின்பம்பராபரமே ... (௱௩௰)

வாயொன்றும்பேசா மௌனியாய்வந்தாண்ட ... *
தேயொன்றும்பேதாதோ வின்பம்பராபரமே ... (௱௩௧)

என்றுமிருந்தபடிக் கென்னையெனக்களித்த ... ✡
தொன்றும்போதாதோ வுனாயாய்பராபரமே ... (௱௩௨)

எண்டிசைகீழ்மேலான வெல்லாம்பெருவெளியாக் ... *
கண்டவிடத்தென்னையுநான் கண்டேன்பராபரமே ... (௱௩௩)

பித்தனையேதுமறியாப் பேதையெனையாண்டவுனக் ... *
கெத்தனைதான்றெண்ட னிடுவேன்பராபரமே ... (௱௩௪)

தாயர்கர்ப்பத்தூடனமுந் தண்ணீருந்தந்தருளு ... ✡
நேயவுனையாரோ நினையார்பராபரமே ... ...(௱௩௫)

விரிந்தமனமொடுங்கும் வேளையினுனுகப் ... *
பரந்தவருள்வாழி பதியேபராபரமே ... ...(௱௩௬)

சிந்தனைபோய்நானெனல்போய்த் தேக்கவின்பமாமழையை... *
வந்துபொழிந்தனை நீ வாழிபராபரமே... ... (௱௩௭)

தந்தேனையோர்வசனந் தந்தபடிக்கின்பமுமாய் ... *
வந்தேனையென்றனை நீ வாழிபராபரமே ... (௱௩௮)

மண்ணும்விண்ணும்வந்து வணங்காவோநின்னருளைக் ... *
கண்ணுறவுட்கண்டவரைக் கண்டாற்பராபரமே ... (௱௩௯)

என்றுங்கருணைபெற்ற வின்பத்தபோதனர்சொல் ... ✡
சென்றசென்றதிக்கனைத்துஞ் செல்லும்பராபரமே ...(௱௪௰)

ஆடுவதும்பாடுவது மானந்தமாகநின்னைத் ... ✡
தேடுவதுநின்னடியார் செய்கைபராபரமே... ... (௱௪௧)

பொங்கியறில்றண்ணருளைப் புட்கலமாப்பெற்றவர்கட் ... *
கெங்கெழுந்தென்ஞாயிறி யம்பாய்பராபரமே ... (௱௪௨)

பாலரொடுபேயர்பித்தர் பான்மையெனநிற்பதுவே ... ✡
சீலமிகுஞானியர்தஞ் செய்கைபராபரமே ... (௱௪௩)

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந் ... *
தொண்டர்விளையாட்டே சுகங்காண் பராபரமே ... (௩௪௪)
கங்குல்பகலற்ற திருக் காட்சியர்கள் கண்டவழி ... *
யெங்குமொருவழியே யெந்தாய் பராபரமே ... (௩௪௫)
காயநிலையல்லவென்று காண்பாருறங்குவரோ ... ... *
தூயவருட்பற்றுத் தொடர்வார் பராபரமே ... ...(௩௪௬)
அப்புமுப்பும்போன்ற வயிக்ய பரானந்தர்தமக் ... *
கொப்புவமைசொல்லவும் வாயுண்டோ பராபரமே ... (௩௪௭)
சித்தந்தெளிந்து சிவமாஞ் ஞானமேலோர்களுங் ... ... *
கொத்தடிமையான குடி நான் பராபரமே ... (௩௪௮)
தம்முயிர்போலெவ்வுயிருந் தாமென்று தண்ணருள்கூர் ... *
செம்மையருக்கேவலென்று செய்வேன் பராபரமே .. [௩௪௯]
விண்ணுக்கும் விண்ணாய் மேவுமுனக்கியான் பூசை ... ... *
பண்ணிநிற்குமாறு பகராய் பராபரமே ... ... ..[௩௫௰]
நெஞ்சகமே கோயி னினைவே சுகந்தமன்பே ... .... *
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே .. ... [௩௫௧]
கெட்டவழியாணவப்பேய் கீழாக மேலான ... ... *
சிட்டருனைப் பூசை செய்வார் பராபரமே ... ... [௩௫௨]
கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின் ... *
மேலெழுப்பிற் றேகம் விழுமோ பராபரமே ... [௩௫௩]
பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால் ...*
விஞ்சியஞானம் விளங்கும் பராபரமே ... ... [௩௫௪]
அன்பர்பணி செய்யவெனை யாளாக்கிவிட்டுவிட்டா ... ✻
லின்பநிலைதானே வந்தெய்தும் பராபரமே ... [௩௫௫]
மூர்த்திதலந்தீர்த்த முறையாற்றொடங்கினர்க்கோர் ... *
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே ... [௩௫௬]
விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு ... *
மரும்புமலர்காய்கனிபோ லன்றோ பராபரமே ... [௩௫௭]
தானந்தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ ... *
ஞானந்தனையணைய நல்லோர் பராபரமே... ... ..[௩௫௮]
சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்றவாணவப்பேய்க் .. ✻
கின்னல்வருவதெந்நா ளெந்தாய் பராபரமே ... [௩௫௯]
இன்றோ விருவினைவந் தேறியது நானென்றோ ... ... ✻
வன்றே வினைதந்ததன்றோ வாற்றேன் பராபரமே ... [௩௬௰]
என்னைமுந்தாணின்னைவிட வில்லையென்றாலியாய் முனமே ... ✻
பண்ணும்வினையேது பகராய் பராபரமே ... ... [௩௬௧]
என்னையின்னதென்றறியா வேழைக்குமா கெடுவேன் ... ✻
முன்னைவினை கூடன் முறையோ பராபரமே ... ...[௩௬௨]

அறியாதநாள்செய்வினையை யையாநீகூட்டுங் ... ... *
குறியேதெனக்குளவு கூறாய்பராபரமே ... ... [௱௬௩]

என்னைக்கெடுக்க விசைந்தவிருவினைநோய் ... ... *
தன்னைக்கெடுக்கத் தகாதோபராபரமே ... ... [௱௬௪]

வல்லமையேகாட்டுகின்ற மாமாயைநாமொருவ ... *
ரில்லையெனி னெங்கே யிருக்கும்பராபரமே ... [௱௬௫]

முக்குணத்தாலெல்லா மூளைக்கப்பிரகிருதிக் ... ... *
கிக்குணத்தைநல்கியதா ரொந்தாய்பராபரமே .... ... [௱௬௬]

ஆற்றப்படாதுன்ப மையவென்றாலெமனது ... *
தேற்றப்படாதினியென் செய்வேன்பராபரமே ... [௱௬௭]

பூராயமாய்மனதைப் போக்கவறியாமலையோ ... *
யாராயலந்தே னரசேபராபரமே ... ... ... [௱௬௮]

சினமிறக்கக்கற்றாலுஞ் சித்தியெல்லாம்பெற்றாலு ... *
மனமிறக்கக்கல்லார்க்கு வாயேன்பராபரமே ... [௱௬௯]

வாதுக்குவந்தெதிர்த்த மல்லரைப்போற்பாழ்த்தமன ... *
மேதுக்குக்கூத்தாடு தெந்தாய்பராபரமே ... ... [௱௭௰]

சூதாடுவார்போற்று வண்டுதுவண்டுமனம் ... ... *
வாதாடினென்னபலன் வாய்க்கும்பராபரமே ... [௱௭௧]

கொள்ளித்தேள்கொட்டிக் குதிக்கின்றபேய்க்குரங்காய்க் .. *
கள்ளமனந்துள்ளுவதென் கண்டாய்பராபரமே ... (௱௭௨)

வந்ததையும்போனதையும் வைத்துவைத்துப்பார்த்திருந்தாற் .. *
சிந்தையிதமகிதஞ் சேரும்பராபரமே ... ...(௱௭௩)

ஏறுமயிர்ப்பாலமுணர் விந்தவிடயக்கணொருப் ... *
பாறெனவுநன்றா வறிந்தேன்பராபரமே ... ...(௱௭௪)

பொறிவழியேயேழை பொறியாயுழல்வதுநின் ... *
னறிவில்விதித்த விதியோபராபரமே ... ...(௱௭௫)

பாசசாலங்களெல்லாம் பற்றுவிட ஞானவைவாள் ... *
வீசநாளெந்நாள் விளம்பாய்பராபரமே ... (௱௭௬)

எந்தவுடலேனுமெடுத்தவுட லல்லதென்ற ... *
சிந்தைசெயவந்ததிறஞ் செப்பாய்பராபரமே ... (௱௭௭)

பொய்யெல்லாமொன்றாய்ப் பொருந்திவைத்தபொய்யுடலை ... *
மெய்யென்றன்மெய்யாய் விடுமோபராபரமே ...(௱௭௮)

மின்னனையபொய்யுடலை மெய்யென்றநம்பியையோ ...... *
நின்னைமறக்கை நெறியோபராபரமே ... (௱௭௯)

நித்தியமொன்றில்லாத நீர்க்குமிழிபோன்றவுடற் ... *
கித்தனைதான் துன்பமுண்டோ வெந்தனேபராபரமே ... (௱௮௰)

தேகமிறுமென்றசடர் தேம்புவதென்னித்தியமாயி... ... *
ஞானமறிந்தாற்பயந்தா னுண்டோபராபரமே ... (௱௮௧)

எதைச்சுமையா வெடுப்பாரொடுத்தவுடற் ... ...✿
சேதமுற்றின்யாதுபின்னே செல்லும்பராபரமே ...(௱௮௨)
தோற்பாவைநாலாட் சுமையாகுஞ்சீவனென்றிங் ... *
கார்ப்பாலெடுத்ததெவ ராலேபராபரமே ... (௱௮௩)
ஞாலத்தைமெய்யெனவே நம்பிநம்பிநாளுமென்றன் ... *
காலத்தைப்போக்கியென் கண்டேன்பராபரமே ... (௱௮௪)
பொய்யுலகவாழ்க்கைப் புலைச்சேரிவாசனைநின் ... *
மெய்யருளின்மூழ்கின் விடுங்காண்பராபரமே ... (௱௮௫)
நாலேணிவின்னோற நூற்குப்பருத்திவைப்பார் ... ✿
போலேகருவிநன்னூற் போதம்பராபரமே ... (௱௮௬)
சின்னஞ்சிறியார்கள் செய்தமணற்சோற்றையொக்கு ... ..✿
மன்னுங்கலைஞான மார்க்கம்பராபரமே ... (௱௮௭)
வாசகஞானத்தால் வருமோசுகம்பாழ்த்த ... ✿
பூசலொன்றும்போமோ புகல்வாய்பராபரமே ... (௱௮௮)
கேட்டதையேசொல்லுங் கிளிபோலநின்னருளி ... *
னூட்டமின்றிவாய்பேச னன்றோபராபரமே... ... (௱௮௯)
வெளியாயருளில் விரவுமன்பாதேக ... ... ✿
மொளிபாய்ப்பிறங்கியது முண்டோபராபரமே ...(௱௯)
காலமொருமூன்றுங் கருத்திலுணர்ந்தாலுமலை ... *
ஞாலந்தனக்குளாயாய் நல்லோர்பராபரமே ... (௱௯௧)
கொல்லாவிரதமொன்று கொண்டவரேநல்லோர்மற் ... *
றல்லாதாரியாரோ வறியேன்பராபரமே ... (௱௯௨)
இல்லாதகாரியத்தை யிச்சித்துச்சிந்தைவழி ... ✿
சொல்லாமைநல்லோர் திறங்காண்பராபரமே , (௱௯௩)
எதுவந்துமேதொழிந்து மென்னறியாமென்றூர்கள் ... *
போதநிலைகண்ட புலத்தோர்பராபரமே ... (௱௯௪)
ஆயிரஞ்சொன்னாலு மறியாதவஞ்சநெஞ்சப் ... ✿
பேயொடுகூடிற் பிழையாம்பராபரமே ... (௱௯௫)
மாயமயக்கொழிந்தாற் மற்றொன்றைநாடுவரோ ... *
நேயவருணிலையி னிற்பார்பராபரமே ... (௱௯௬)
நித்திரையிற்செத்தபிண நேருமுடல்கிச்சைவையாச் ... ...*
சுத்தர்களேநல்ல துறவோர்பராபரமே ... (௱௯௭)
எந்நெஞ்சமேனு மிரங்குமேநின்னருட்குக் ... ✿
கன்னெஞ்சருமுளரோ காட்டாய்பராபரமே ... [௱௯௮]
மந்தவறிவாகியின்பம் வாயாதிருந்தலைந்தாற் ... ... *
சிந்தைமயங்காதோவென் செய்வேன்பராபரமே ... [௱௯௯]
தேடினேன்றிக்கனைத்துந் தெண்டனிட்டேன்சிந்தைநைந்து...*
வாடினேனென்மயக்க மாற்றாய்பராபரமே ... ... [௨௱]

மடிமையெனுமொன்றை மறுத்தன்றோ வென்னை ... *
படிமைகொளல்வேண்டு மரசேபராபரமே ... ... ... [௨௱௧]

காலர்பயந்தீர்வின்பக் காற்கபயமென்றெழுந்த ... ✿
மாலைவளர்த்தனையே வாழிபராபரமே ... ... [௨௱௨]

நீர்புற்புதமாய் நினைவருட்கே நின்றழியப் ... ... *
பார்ப்பதல்லால்வேறுமொன்றைப் பாரேன்பராபரமே ... [௨௱௩]

நீர்க்குமிழிபோலென் னினைவுவெளியாய்க்கரையப் ... .. ✿
பார்க்குமிடமெல்லாமென் பார்வைபராபரமே ... [௨௱௪]

ஆடிபோய்ப்பம்பரம்போ லாசையுடனெங்குமுனைத் ... ...✿
தேடிபோய்நின்றேனென் செய்வேன்பராபரமே ... ...[௨௱௫]

வேதாந்தஞ்சித்தாந்தம் வேறென்னார்கண்களிக்கு ... ... ✿
நாதாந்தமோன நலமேபராபரமே ... ... [௨௱௬]

ஆனந்தமானநின்னை யன்றியொன்றையுன்னாத ... ...*
மோனந்தமியேற்கு முத்திபராபரமே ... [௨௱௭]

ஏதுக்குமுன்னைவிட வில்லையென்றுலன்கருத்தைச் ..., *
சோதிக்கவேண்டாநான் சொன்னேன்பராபரமே ... [௨௱௮]

முத்தியிலுந்தேகமிசை மூவிதமாஞ்சித்திபெற்றோ ... *
ரெத்தனைபேரென்றுரைப்ப தெந்தாய்பராபரமே ... [௨௱௯]

நீயன்றிநானார் நினைவாரென்னெஞ்சகமார் ... ✿
தாயன்றிச்சூலுமுண்டோ சாற்றாய்பராபரமே ... [௨௱௰]

அங்கமேநின்வடிவ மானசுகர்கூப்பிடநீ ... ... *
யெங்குமேனேனென்ற தென்னேபராபரமே ... [௨௱௰௧]

கொள்ளைவெள்ளத்தண்ணருண்மேற் கொண்டுசுழித்தார்த்திழித்
கள்ளமனக்கப்பலெங்கே காணும்பராபரமே ... [௨௱௰௨] [தாத்

எக்கலையுங்கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ்சம்மதஞ்சொல ...✿
வக்கனையாலின்பம் வருமோபராபரமே ... ... [௨௱௰௩]

கல்லெறியப்பாசி கலைந்துநன்னீர்காணுநல்லோர் ... *
சொல்லுணரில் ஞானம்வந்துதோன்றும்பராபரமே ...[௨௱௰௪]

நின்னையுணர்ந்தோர்கடமை நிந்தித்தபேயறிஞ... ... ✿
ரென்னகதிபெறுவா ரெந்தாய்பராபரமே ... ...[௨௱௰௫]

என்னதியானென்னலற்றோ ரெங்கிருந்துபார்க்கினுநின் ... *
சன்னிதியாநீ பெரியசாமிபராபரமே ... [௨௱௰௬]

சோற்றுத்துருத்திச் சுமைசுமப்பக்கண்டிருக்கக் ... *
காற்றைப்பிடித்தலைந்தேன் கண்டாய்பராபரமே ... [௨௱௰௭]

உள்ளபடியொன்றை யுணர்க்கினவர்க்குள்ளூறவாய்க் ... ✿
கள்ளமின்றியன்பாய்க் களிப்பேன்பராபரமே ... [௨௱௰௮]

அடுத்தவியல்பாகவொன்றை யான்பகர்வதல்லாற் ... ✿
றொடுத்தொன்றை யான்வேண்டிச்சொல்லேன்பராபரமே௨௱௰௯

உள்ளமறியாதொருவ ரொன்றையுன்னிப்பேசிலையோ ... *
துள்ளியிளங்கன்றொத்த துடிப்பேன்பராபரமே ...(௨௱௨௰)

எல்லாருமின்புற் றிருக்கநினைப்பதுவே ... ... *
அல்லாமல்வேறொன் றறியேன்பராபரமே... ... (௨௨௧)

முன்னாண்மெய்ஞ்ஞான முனிவர்தலையீட்டதல்போ ... *
லிந்நாளிற்காணவெனக் கிச்சைபராபரமே ... (௨௨௨)

கன்மமென்பதெல்லாங் கரிசறவேமெய்ஞ்ஞான ... *
தன்மநிலைசார்ந்ததன்பர் தன்மைபராபரமே ... (௨௨௩)

கண்டிபிலாதென்னறிவிங் கண்ணூடேகாட்சிபெற ... *
மண்டியபேரொளிநீ வாழிபராபரமே ... ...(௨௨௪)

நானெனதன்மையென்று நாடாமலுடலின்ப ... *
வானாகிநின்றனைநீ வாழிபராபரமே ... ... (௨௨௫)

அகத்தூடறிவறிவா யண்டமெல்லாந்தானாய் ... *
மகத்தாகிநின்றனைநீ வாழிபராபரமே... ... (௨௨௬)

காரகமாங்கர்ப்பவறைக் கண்ணூறிலமென்கண்ணே ... *
வாரம்வைத்துக்காத்தனைநீ வாழிபராபரமே ... (௨௨௭)

பரந்தோர்கடேசமெம்பார் பூமியைப்போராடி ... *
யிரந்தோருந்தம்மலிதன்பா லாயினேபராபரமே ... (௨௨௮)

மூர்த்திமெய்யல்லாம்வாழியெங்கள் மோனகுருவாழியருள் ... *
வார்த்தையென்றும்வாழியன்பர் வாழிபராபரமே ... (௨௨௯)

சொல்லும்பொருளுந் தொடராவருளினமிழ்ந் ... *
செல்லும்படிக்கருணை செய்தாய்பராபரமே ... (௨௩௰)

இற்றைவரைக்குள்ளாக வெண்ணரிடசித்திமுத்தி ... *
பெற்றவர்களெத்தனைபேர் பேசாய்பராபரமே ... (௨௩௧)

நாயிநகருதிர ணட்டிலப்பாளையமும .. ... ... *
யீநிசெபுமோமுடிவி லெந்தாய்பராபரமே ... (௨௩௨)

தேடித்திரவியமுஞ் சேர்ந்தமணிப்பெட்டகமும் ... *
கூடவருந்துணையோ கூறாய்பராபரமே ... (௨௩௩)

தேடாதசெட்டிலவோ செங்கைத்துலாக்கோல்போல் ...*
வாடாச்சமநிலையில் வாழ்வார்பராபரமே ... (௨௩௪)

நீராய்க்கசிந்துருகி நெட்டுயிர்த்துவிம்மிமெனைப் ... *
பாராதமென்றே பகராய்பராபரமே ... ..(௨௩௫)

உள்ளபொருளாழியுடன் மூன்றுமென்றேதானீ ... *
கொள்ளைகொண்டநீயென் குறைதீர்பராபரமே ... (௨௩௬)

ஆழ்ந்தாயேயிவ்வுலகி லல்லலெல்லாந்தீர்ந்தருளால் ... *
வாழ்ந்தாயேயென்றனைநீ வாழிபராபரமே ... ... (௨௩௭)

தாராவருளையெல்லாந் தந்தெனையாண்டருளில்... .. *
வாராயோவென்றனைநீ வாழிபராபரமே ... (௨௩௮)

ஆசையுன்மீதல்லா லருளறியவேறுமொன்றிற் ... *
பாசம்வையேனின்கருணைப் பாங்காற்பராபரமே ... (உஙகூ)

ஆதியந்தநீகுருவா யாண்டதல்லானின்னையன்றிப் ... *
போதனையுமுண்டோ புகலாய்பராபரமே ... (உசய)

தானாகவந்து தடுத்தாண்டெனையின்ப ... ... *
வானாகசெய்தவின்ப வானேபராபரமே ... (உசக)

பற்றற்றிருக்குநெறி பற்றிக்கடன்மலையுஞ் ... *
சற்றறநினைக்குமனஞ் சொன்னேன்பராபரமே... ...(உசஉ)

படிப்பற்றுக்கேள்வியற்றுப் பற்றற்றுச்சிந்தைத் ... *
துடிப்பற்றார்க்கன்றோ சுகங்காண்பராபரமே ... (உசங)

சத்தாகிநின்றோர் சடங்கவிலிங்கமென ... ... *
வைத்தாருமுண்டோவென் வாழ்வேபராபரமே ... (உசச)

சித்தநிருவிகற்பஞ் சேர்ந்தாருடற்றீபம் ... ...*
வைத்தகர்ப்பூரம்போல் வயங்கும்பராபரமே ... (உசரு)

ஆதிகாலத்திலென்னை யாண்டவனேயிப்பாவி ... *
போதியெனினெங்கேநான் போவேன்பராபரமே ... (உசகா)

நாவழுத்துஞ்சொன்மலரோ நானுதிக்கும்பொன்மலரோ......*
தேவையுனக்கின்னதென்று செப்பாய்பராபரமே ... ...(உசஎ)

கன்னறரும்பாகாய்க் கருப்புவட்டாய்க்கற்கண்டா ... *
யின்னமுதாயென்னு ளிருந்தாய்பராபரமே ... (உசஅ)

சிற்பரமேதற்பரமே தெய்வசுருதிசொன்ன ... *
வற்புதமேயன்பே யறிவேபராபரமே ... (உசகூ)

அறிவிப்பாநீயென்றா லைம்புலன்கடந்தந் ... ... *
நெறிநிற்பாரியாரோ நிகழ்த்தாய்பராபரமே ... (உருய)

அந்தக்கரணமெனு மாகாதபேய்களெனை ... *
வந்துபிடித்தாட்ட வழக்கோபராபரமே ... (உருக)

ஐவரொடுங்கூடாம லந்தரங்கசேவைதந்த ... ...*
தெய்வவறிவே சிவமேபராபரமே ... ... (உருஉ)

அருளாகிநின்ற சுகமாகாமலேயோ ... ... *
விருளாகிநிற்க வியல்போபராபரமே ... ...(உருங)

அன்பரெல்லாமின்ப மருந்திடவும்யானொருவன் ... *
றுன்புறுதனன்றோநீ சொல்லாய்பராபரமே ... (உருச)

சந்ததமுநின்கருணை சாற்றுவதல்லால்வேறு ... ... *
சிந்தையறியேனுன் சித்தம்பராபரமே ... (உருரு)

நானானெனக்குளறு நாட்டத்தாலென்னைவிட்டுப் ... *
போனாலுமுன்னைவிட்டுப் போகேன்பராபரமே ... (உருகா)

இக்காயம்பொய்யென்றோ நீட்டத்துனக்கபயம் ... *
புக்காருண்டோ புகலாய்பராபரமே ... (உருஎ)

நாறுதல்பூரணமே சாருமிடமுண்டுயிரும் ... *
மாறுதியுமொழுங்காய் மன்னும்பராபரமே ... (௨௫௮)

உன்னுமனங்கர்ப்பூர வுண்டைபோலேகரைய ... *
மின்னுமானந்த விளக்கேபராபரமே ... ...(௨௫௯)

நாட்பட்டலைந்த நடுக்கமெலாந்தீரவுனக் ... ... *
காட்பட்டேந்துன்பமெனக் காமோபராபரமே ... (௨௬௦)

பாவிபடுங்கண்கலக்கம் பார்த்துமிரங்காதிருந்தா ... *
லாவிக்குறுதுணையா ரையாபராபரமே ... ... ...(௨௬௧)

தின்னிறைவேதாரகமாய் நின்றசுகமெய்தாம ... ... *
லென்னிறைவேபாவித்தே னென்னேபராபரமே ... (௨௬௨)

நின்னைச்சரண்புகுந்தா னீக்கல்வேண்டுமல்லா ... *
லென்னைப்புறம்விடுத லென்னேபராபரமே ... ...(௨௬௩)

மாறாதுன்பமெல்லாம் வந்துரைத்தானின்செவியி ... ... *
லேறாதவாறே தியம்பாய்பராபரமே ... ... (௨௬௪)

விஞ்சுபுலப்பாடனைத்தும் வீறுதுன்பஞ்செய்யவந்த ... ... *
வஞ்சுபுலவேடருக்கு மாற்றேன்பராபரமே .. ...(௨௬௫)

கன்னங்கரியநிறக் காமாதிராக்ஷசப்பேய்க் ... ... *
கென்னையிலக்காகவைத்த தென்னேபராபரமே ... (௨௬௬)

சித்திநெறிகேட்டல் சைகமபக்கஞ்சென்மமற ... ...*
முத்திநெறிகேட்டன் முறைகாண்பராபரமே ... (௨௬௭)

சிந்தைசிதயச் சிதபானவானந்த ... ... ... *
மெந்தவகையாலேவந் தெய்தும்பராபரமே ... (௨௬௮)

கூர்த்தவறிவாலறியக் கூடாதெனக்குரவன் ... ... *
சேர்த்தபடிதானே திரிந்தேன்பராபரமே ... ...(௨௬௯)

பத்தாருந்தும் பரமசுகம்யானருந்த ... ... *
வெத்தனைநாள்செல்லு மியம்பாய்பராபரமே ... (௨௭௦)

தீரத்திறற்றுறவு சேரமலிவ்வுலகிற் ... ... *
பாரத்தன்பேசல் பண்போபராபரமே ... ..(௨௭௧)

இந்தவெளியினையுண் டேப்பமிடப்போறிவாத் ... ...*
தந்தவெளிக்கேவெளியாய்ச் சார்ந்தேன்பராபரமே ... (௨௭௨)

உணர்த்துமுனைநாடா துணர்ந்தவையேநாடி ... ... *
யிணக்குறுமென்னேழமைதா னென்னேபராபரமே ... (௨௭௩)

உண்டுபோலின்று முலகைத்திரமெனவுட் ... ... *
கொண்டுநான்பெற்றபலன் கூறாய்பராபரமே ... (௨௭௪)

உள்ளபடியாதுமென வுற்றுணர்ந்தேனக்கணமே ... *
கள்ளமனம்போனவழி காணேன்பராபரமே ... (௨௭௫)

சித்தமவுனஞ் செயல்வாக்கெலாமவுனஞ் ... ...*
சுத்தமவுனமென்பாற் றேன்றிற்பராபரமே ... ...(௨௭௬)

எண்ணிற்பலகோடிபுவி யெத்தனையோவத்தனைக்குங் ... *
கண்ணிற்கலந்தவருட் கண்ணேபராபரமே ... (௨௭௭)

எனக்கினியாருன்போலு மில்லையென்றாலியானு ... *
முனக்கினியானாகா வுளமேன்பராபரமே ... ...(௨௭௮)

அவ்வடிவிவ்வடங்காமை யகமும்புறமுமொன்றாக் ... *
கண்டவென்னை நீகலந்த காலம்பராபரமே ... (௨௭௯)

எத்தனையோகோடி யெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ் ... *
சித்தமிரங்கிலையென் செய்வேன்பராபரமே ... (௨௮௦)

அன்றந்தநால்வருக்கு யற்புதமாநீயுரைத்த ... *
தொன்றந்தவார்த்தையெனக் குண்டோபராபரமே ...(௨௮௧)

அப்பனென்றன்னையென்று மாரியனென்றுமுனையே.... *
செப்புவதுமுன்னிலையின் சீர்காண்பராபரமே ... (௨௮௨)

கட்டுங்கனமுமந்தக் காலர்வரும்போதெதிர்த்து ... *
வெட்டுந்தளமோ விளம்பாய்பராபரமே ... (௨௮௩)

பேசாதமோனநிலை பெற்றன்றோநின்னருளாம் ... *
வாசாமகோசரந்தான் வாய்க்கும்பராபரமே ... (௨௮௪)

கற்றாலுங்கேட்டாலுங் காயமழியாதசித்தி ... ... *
பெற்றாலுமின்பமுண்டோ பேசாய்பராபரமே ... (௨௮௫)

கண்டவடிவெல்லாங் கரைக்கின்றவஞ்சனைப்போ ... *
லண்டமெல்லாநின்னருளே யன்றோபராபரமே ... (௨௮௬)

தன்செயலாலொன்றுமிலை தாமென்றாலும்பாவி ... *
நின்செயலாய்நில்லா நிலையேன்பராபரமே ... ...(௨௮௭)

கொலைகளவுகட்காமங் கோபம்விட்டாலன்றோ ... *
மலையிலக்காநின்னருடான் வாய்க்கும்பராபரமே ... (௨௮௮)

தன்னையறியாதுசகந் தானாயிருந்துவிட்டா ... ... *
லுன்னையறியவருமுண்டோபராபரமே ... (௨௮௯)

ஒன்றிரண்டென்றுன்னு முணர்வுகொடுத்துள்ளபடி ... *
யென்றுமென்னைவையா யிறையேபராபரமே ... (௨௯௦)

கருதுமடியார்களுளங் காணவெளியாகுந் ... ... *
துரியநிறைவான சுகமேபராபரமே ... ... (௨௯௧)

பொய்குவித்தநெஞ்சனருட் பொற்பறிந்துதிக்கனைத்துங்... *
கைகுவித்துநிற்பதெந்தக் காலம்பராபரமே ... (௨௯௨)

அத்துவிதமான வதிசயவனுபவமே ... ... *
சுத்தநிலையந்நிலையார் சொல்வார்பராபரமே ... (௨௯௩)

வைத்தசுவரலம்பின் மண்ணோமோமாயையினோர்க் ... *
கெத்தனைபோதித்துமென்னா மெந்தாய்பராபரமே ... (௨௯௪)

பூட்டற்றுத்தேகமற்றுப் போகுமுன்னே நின்னருளைப் ... *
பூட்டத்தகாதோவென் கண்ணேபராபரமே ... (௨௯௫)

பொய்பகலமெய்யான போதநிலைகண்டோர்க்கோ ... ... *
ளையமில்லையையமில்லை யையபராபரமே ... [௯௱௰௫]
மந்திரத்தையுன்னி மயங்காதெனக்கினியோர் ... ... *
தந்திரத்தைவைக்கத் தகாதோபராபரமே ... (௯௱௰௬)
விண்கருணைபூத்ததென்ன மேவியுயிர்க்குயிராய்த் ... *
தண்கருணைதோன்றவருடாய்நீபராபரமே ... (௯௱௰௭)
தன்மயமாநின்றநிலை தானேதானாகிநின்று ... *
னின்மயமாயெல்லா நிகழும்பராபரமே ... (௯௱௰௮)
எங்கியிடையுநெஞ்ச வேழையைநீவாவென்றே ... *
பாங்குபெறச்செய்வதுன்மேற் பாரம்பராபரமே ... (௯௱௰௯)
ஆண்டநின்னநீங்கா வடிமைகள்யாமாணவத்தைப் ... *
பூண்டதென்னகன்மம் புகலாய்பராபரமே ... (௯௨௰)
எங்கணுநீயென்று லிருந்தபடியெய்தாம ... ... *
லங்குமிங்குமென்றலைய லாமோபராபரமே ... (௯௨௧)
சற்குமதுவுண்டு களித்ததல்லானின்னருளி ... ... *
னிற்குமதுதந்ததுண்டோ நீதான்பராபரமே ... (௯௨௨)
அண்டபகிரண்ட மறியாதநின்வடிவைக் ... ... *
கண்டவரைக்கண்டாற் கதியாம்பராபரமே ... ... (௯௨௩)
கலக்கமுறநெஞ்சைக் கலக்கித்திரும்பத் ... ... *
துலக்குபவநீயலையோ சொல்லாய்பராபரமே ... (௯௨௪)
சிந்தையுமென்போலச் செயலற்றடங்கிவிட்டால் ... *
வந்ததெலாநின்செயலா வாழ்வேன்பராபரமே ... (௯௨௫)
பந்தமெலாந்தீரப் பரஞ்சோதிநீகுருவாய் ... ... *
வந்தவடிவை மறவேன்பராபரமே ... ... (௯௨௬)
தானந்தவான சகசநிருவிகற்ப ... ... *
வானந்தநிட்டையருளாயபராபரமே ... ...(௯௨௭)
அல்லலெல்லாந்தீரவெனக் கானந்தமாகவரு ... ... *
சொல்லையென்பால்வைத்ததையென் சொல்வேன்பராபரமே....()
சிந்தைமயக்கமறச் சின்மயமாய்நின்றவுன்னைத் ... *
தந்தவுனக்கென்னையுநான் றந்தேன்பராபரமே ... (௯௨௯)
மைகாட்டுமாயை மயக்கமறநீகுருவாய்க் ... ... *
கைகாட்டவுங்கனவு கண்டேன்பராபரமே ... (௯௩௰)
மால்வைத்தசிந்தை மறக்கவென்சென்னியிசைக் ... *
கால்வைக்கவுங்கனவு கண்டேன்பராபரமே ... (௯௩௧)
மண்ணானமாயையெல்லா மாண்டுவெளியாகவிரு ... *
கண்ணாரவுங்கனவு கண்டேன்பராபரமே ... (௯௩௨)
மண்ணீர்மையாலே மயங்காதுன்கையாலென் ... ... *
கண்ணீர்துடைக்கவுநான் கண்டேன்பராபரமே ... (௯௩௩)

உள்ளதுணராவுணர்வில் மாபாவியென்றோ ... ... *
மெள்ளமெள்ளக்கைநெகிழ விட்டாய்பராபரமே ... (௱௩௪)

எல்லாநினதுசெய லென்றெண்ணுமெண்ணமுநீ ... *
யல்லாலெனக்குளதோ வையாபராபரமே ... ... (௱௩௫)

பந்தமயக்கிருக்கப் பற்றொழிந்தேனென்றுளரு ... *
மிந்தமயக்க மெனக்கேன்பராபரமே ... ... (௱௩௬)

காட்சியெல்லாங்கண்ணைவிடக் கண்டதுண்டோயாதினுக்கு ... *
மாட்சியுனதருளே யன்றோபராபரமே ... ... [௱௩௭]

எட்டுத்திசையுமொன்றா யின்பமாநின்றவுன்னை ... *
விட்டுப்பிரியவிடம் வேறோபராபரமே ... ... [௱௩௮]

பிரியாதுயிர்க்குயிராய்ப் பின்னமறவோங்குஞ் ... *
செறிவேயறிவே சிவமேபராபரமே ... ... [௱௩௯]

ஏதேதுசொன்னாலு மெள்ளளவுநீயிரங்கா ... ... *
ஞதேதெனக்குளவு சொல்லாய்பராபரமே ... ... [௱௪௰]

கற்பனையாப்பாடுகின்றேன் கண்ணீருங்கம்பலையுஞ் ... *
சொற்பனத்துங்காணேனென் சொல்வேன்பராபரமே... [௱௪௧]

வன்பொன்றுநீங்கா மனதிறப்பமாறுப்பே ... *
ரன்பொன்றும்போதுமெனக் கையாபராபரமே ... (௱௪௨)

ஏதுந்தெரியா வெளியேனைவாவெனநின் ... ... *
போதநிலைக்காட்டிற் பொறாதோபராபரமே ... [௱௪௩]

ஓராமலெல்லா மொழிந்தேற்குன்றெய்வவரு... ... *
டாராதிருக்கத் தகுமோபராபரமே ... ... [௱௪௪]

மோனந்தருஞான மூட்டியெனக்குவட்டா ... *
வானந்தவாழ்க்கை யருளாய்பராபரமே ... [௱௪௫]

வாடுமுகங்கண்டென்னை வாடாமலேகாத்த ... *
நீடுங்கருணை நிறைவேபராபரமே ... ... [௱௪௬]

புந்தியினூடுநின்னடியைப் போற்றுகின்றமெய்யடியார் ... *
சிந்தையிறப்போதின் றியானம்பராபரமே ... ... [௱௪௭]

உனக்குவமையாக்கருணை யுள்ளவரும்வன்மைக்... ... *
கெனக்குவமையானவரு மில்லைபராபரமே ... ... [௱௪௮]

தாயிருந்தும்பிள்ளை தளர்ந்தாற்போலெவ்விடத்து ... *
நீயிருந்துநான்றளர்ந்து நின்றேன்பராபரமே ... [௱௪௯]

வாயாற்கிணறுகெட்ட வாறேபோல்வாய்பேசிப் ... *
பேயானார்க்கின்பமுண்டோ பேசாய்பராபரமே ... [௱௫௰]

பாவமென்றாலேதும் பயமின்றிச்செய்யவித்தச் ... *
சிவனுக்கார்போதந் தெரித்தார்பராபரமே ... [௱௫௧]

இன்பநிருவிகற்ப மின்றேதாவன்றெனிலோ ... *
பம்பொருப்பரிது சொன்னேன்பராபரமே ... [௱௫௨]

கற்குநிலைக்கற்றாற் கருவியவிழாதருளாய் ... *
நிற்குநிலைகற்பதுவே நீதம்பராபரமே ... [௩௫௩]

காச்சச்சுடர்விடும்பொற் கட்டிபோனின்மலமாய்ப்... ... ✡
பேச்சற்றவரோ பிறவார்பராபரமே ... ... [௩௫௪]

பற்றொழிந்துசிந்தைப் பதைப்பொழிந்துதானேதா... ...*
னற்றிருப்பதென்றைக் கமைப்பாய்பராபரமே ... [௩௫௫]

உருவெளிதான்வாதனூ ருத்தமர்க்கல்லாலினமுங் ... *
குருவழிநின்றார்க்குமுண்டோ கூறாய்பராபரமே ... [௩௫௬]

தேகமியாதேனுமொரு சித்திபெறச்சீவன்முத்தி ... *
யாகுமெற்றிநல்லநெறி யையாபராபரமே ... .. [௩௫௭]

உலகநெறிபோற்சடல மோயவுயிர்முத்தி ... *
யிலகுமெனல்பந்த வியப்போபராபரமே ... [௩௫௮]

பரமாப்பரவெளிபாற் பார்ப்பதல்லான்மற்றெவர்க்குந் ... .. ✡
திரமேதுயில்லைநன்றாத் தேர்ந்தேன்பராபரமே ... [௩௫௯]

தேடுவேனின்னருளைத் தேடுமுன்னேயெய்திநட ... ✡
மாடுவேனானந்த மாவேன்பராபரமே ... [௩௬௦]

உள்ளங்குழைபவுடல்குழைபவுள்ளிருந்த ... *
கள்ளங்குழைபவென்று காண்பேன்பராபரமே ... [௩௬௧]

பட்டப்பகற்போலப் பாழ்த்தசிந்தைமாளினெல்லாம் ... *
வெட்டவெளியாக விளங்குப்பராபரமே ... ... [௩௬௨]

பார்க்கினணுப்போற்கிடந்த பாழ்ஞ்சிந்தைமாளினென்னை ... *
யார்க்குச்சரியிடலா மையாபராபரமே ... [௩௬௩]

பாட்டுக்கோவன்பினுக்கோ பத்திக்கோவன்பர்தங்க .. *
ணீட்டுக்கெல்லாங்குறுகி நின்றாய்பராபரமே ... [௩௬௪]

முத்தாந்தவித்தே முளைக்குநிலமாயெழுந்த ... *
சித்தாந்தமார்க்கச் சிறப்பேபராபரமே ... [௩௬௫]

உன்றுவெளியா யுறங்காதபேருணர்வா ... ... *
யென்றுவிக்குள்ளே யிருந்தாய்பராபரமே ... [௩௬௬]

தத்துவமெல்லாமகன்ற தன்மயர்க்குச்சின்மயமா .. *
நித்தமுத்தசுத்த நிறைவேபராபரமே ... ... [௩௬௭]

உள்ளக்கொதிப்பகல வுள்ளுள்ளேயானந்த ... *
வெள்ளமலர்க்கருணை வேண்டும்பராபரமே ... .. [௩௬௮]

என்னைப்புரப்பதரு ளின்கடனுமெய்கடனு ... ... *
நின்னிற்பணிபறவே நிற்கைபராபரமே ... [௩௬௯]

தானேயாதன்னிலையைத் தந்தவருளானந்த ... ... *
வானேமனாதீத வாழ்வேபராபரமே ... .. [௩௭௦]

மண்ணாதிபூதமெல்லாம் வைத்திருந்தநின்னிறைவைக் ...
கண்ணாரக்கண்டு களித்தேன்பராபரமே ... ... [௩௭

அறியாமையெதன் றறிவித்தவன்றேதான் ... ✡
றெரியாவருணிலையும் பெற்றேன்பராபரமே ... (௩௭௨)
நீதெனவுநன்றெனவுந் தேர்ந்துநான்தேர்ந்தபடி ... *
பேதுறநடக்கவொட்டா தென்னேபராபரமே ... (௩௭௩)
கண்டவறிவுகண்டா காரமெனமெய்யறிவிற் ... ... *
கொண்டவர்க்கேமுத்தி கொடுப்பாய்பராபரமே ...(௩௭௪)
ஈருகவல்வினைநா னென்றுமலின்பசுகம் ... ...*
பெரும்படிக்கடிமை பெற்றேன்பராபரமே ... (௩௭௫)
பெற்றாரனுபூதி பேசாதமோனநிலை ... ... ✡
கற்றாருனைப்பிரியார் கண்டாய்பராபரமே ... (௩௭௬)
நீயேநானென்று நினைப்புமறப்புமறத் ... ... *
தாயேயனையவரு டந்தாய்பராபரமே ...(௩௭௭)
சஞ்சலமற்றெல்லாநீ தானென்றுணர்ந்தேனென் ... *
னஞ்சலியுங்கொள்ளா யரசேபராபரமே ... (௩௭௮)
பூதமுதலனைத்தவனை பொய்யென்றமெய்யரெல்லாங் ... *
காதலித்தவின்பக் கடலேபராபரமே ...(௩௭௯)
வாக்குமனமொன்றுபட்ட வார்த்தையல்லாலெவ்வேறாய்ப் ...*
போக்குடையவார்த்தை பொருந்தேன்பராபரமே ... (௩௮௰)
வன்மையின்றியெல்லா மதித்துணர்வாய்க்காலெடுவேன் ... *
றன்மையொன்றுந்தோயாத் தடையோபராபரமே ... (௩௮௧)
பத்தர்சித்தர்வாழிபரி பக்குவர்கள்வாழிசெங்கோல் ... *
வைத்தவர்கள்வாழிகுரு வாழிபராபரமே ... (௩௮௨)
கல்லாதேனானுங் கற்றுணர்ந்தமெய்யடியார் ... *
சொல்லாலேநின்னைத் தொடர்ந்தேன்பராபரமே ... (௩௮௩)
சொல்லிறப்பச்சற்குருவாய்த் தோன்றிச்சுகங்கொடுத்த ...✡
நல்லுனைக்கேகொத்தடிமை நான்காண்பராபரமே ...(௩௮௪)
முத்திக்குவித்தான மோனகருப்புவழி ... ... ✡
சித்தித்திடவிளைந்த தேனேபராபரமே ... (௩௮௫)
திக்கிலாயும்பார்த்த நினைவுமற்றுநிற்பதுவோ ... *
சுத்தவருணிலைநீ சொல்லாய்பராபரமே ... (௩௮௬)
மண்ணுமறிகடலு மற்றுளவுமெல்லாமுன் ... *
கண்ணிலிருக்கவுநான் கண்டேன்பராபரமே ... (௩௮௭)
பூட்டிவைத்தவஞ்சப் பொறிவழியேயென்றனைநீ ... *
யாட்டுகின்றதேதோ வறியேன்பராபரமே ... (௩௮௮)
பொய்புணர்வாயிந்தப் புழுக்கூட்டைக்காத்திருந்தே ... *
னுய்யும்வகையு முளதோபராபரமே ...(௩௮௯)

பராபரக்கண்ணி முற்றுப்பெற்றது. ஆ - ௩௮௯.

# பைங்கிளிக்கண்ணி.



அந்தமுட னாதி யளவாமலென்னறிவிற் ... ... ☆
சுந்தரவான்சோதி துலங்குமோபைங்கிளியே ... (௧)

அகமேவுமண்ணலுக்கென் னல்லலெல்லாஞ்சொல்லிச் .. *
சுகமானநீபோய்ச் சுகங்கொடுவாபைங்கிளியே ... (௨)

ஆவிக்குளாவியெனு மற்புதனார்சிற்சுகந்தான் ... *
பாவிக்குங்கிட்டுமோ சொல்லாய்நீபைங்கிளியே ... ...(௩)

ஆருமறியாமலென்னை யந்தரங்கமாகவந்து ... ... ☆
சேரும்படியிறைக்குச் செப்பிவாபைங்கிளியே ... ...(௪)

ஆறாதகண்ணீர்க்கென் னங்கமானதையுங் ... ...*
கூறாததென்னோ குதலைமொழிப்பைங்கிளியே ... ... (௫)

இன்பருளவாடையழக் கேறுமெமக்கண்ணல்சுத்த ... *
வம்பரமாமாடை யளிப்பானோபைங்கிளியே ... (௬)

உன்னுமலொன்றிரண்டென் றோராமல்வீட்டுநெறி ...☆
சொன்னான்வரவம்வகை சொல்லாய்நீபைங்கிளியே ... (௭)

ஊருமிலார்பேருமிலா ருற்றார்பெற்றாருடனே ... *
யாருமிலாரென்னை யறிவாரோபைங்கிளியே ... (௮)

ஊணாப்பாராமலென்னக் குள்ளகத்துநாயகனார் ... *
சீணாப்பார்த்தாற்கருணை செய்யாரோபைங்கிளியே ... (௯)

என்றுவிடியுமிறை வாவோவென்றென்று ... ...*
நின்றநிலையெல்லா நிகழ்த்தாய்நீபைங்கிளியே... ... (௰)

எந்தமடலூரி யெழுதாவிறைவடிவைச் ... ... ☆
சிந்தைமடலாவெழுதிச் சேர்ப்பேனோபைங்கிளியே ...(௰௧)

கண்ணுண்மணிபோலின்பங் காட்டியெனைப்பிரிந்த ... *
திண்ணியருமின்னம்வந்து சேர்வாரோபைங்கிளியே ... (௰௨)

ஏடார்மலர்சூடே னெம்பெருமான்பொன்னடியாம் ...*
வாடாமலர்முடிக்கு வாய்க்குமோபைங்கிளியே ... (௰௩)

கல்லேன்மலரோன் கனிந்தவன்பேபூசையென்ற ... *
நல்லோர்பொல்லாவெனையு நாடுவரோபைங்கிளியே ... (௰௪)

கண்டதனைக்கண்டு கலக்கந்தவிரொணவே ... ... *
விண்டபெருமானையுநான் மேவுவனோபைங்கிளியே ... (௰௫)

காணாதகாட்சி கருத்துவந்துகாணாமல் ... ... *
வீணாள்கழிந்து மெலிவேனோபைங்கிளியே ... (௰௬)

காந்தமிரும்பைக் கவர்ந்திழுத்தாலென்னவருள் ... *
வேந்தனெனையிழுத்து மேவுவனோபைங்கிளியே ... (௰௭)

காதலால்வாடினதுங் கண்டனையேயெம்மிறைவர் ... *
போதரவாயின்பம் புசிப்பேனோபைங்கிளியே ... (௰௮)

கிட்டிக்கொண்டன்பருண்மை கேளாப்பலவடிகொள் ... *
பட்டிக்குமின்பமுண்டோ சொல்லாய்நீபைங்கிளியே ...(௰௯)

கிட்டோராய்நெஞ்சிற் கிளர்வார்தழுவவென்று ... *
னெட்டோராவரவர் தேசமென்றோபைங்கிளியே .. ... (௨௰)

கூறுங்குணமுமில்லாக் கொள்கையினுமென்கவலை ... *
பாறும்படிக்குமனம் வாரோபைங்கிளியே ... (௨௧)

சின்னஞ்சிறியேன்றன் சிந்தைகவர்ந்தாரிறைவர் ... *
தன்னந்தனியே தவிப்பேனோபைங்கிளியே ... (௨௨)

சிந்தைமருளைத் தெளிவித்தெனையாள ... ... ...*
வந்தகுருநாதனருள் வாய்க்குமோபைங்கிளியே ... (௨௩)

சொல்லிறந்துநின்ற சுகரூபப்பெம்மானை ... *
யல்லும்பகலு மணைவேனோபைங்கிளியே ... (௨௪)

தற்போதத்தாலே தலைகிழதாகவைய ... ... ... *
னற்போதவின்புவர நாட்செலுமோபைங்கிளியே ... (௨௫)

தன்னையறியுந் தருணந்தனிற்றலைவ ... ... ... *
னென்னையணையாதவண்ண மெங்கொளித்தார்பைங்கிளியே.....(௨௬)

தாங்கரியமையலெல்லாந் தந்தனைவிட்டின்னருவாம் ... *
பாங்கியைச்சேர்ந்தாரிறைக்குப் பண்போசொல்பைங்கிளியே (௨௭)

தாவியதோர்மர்க்கடமாந் தன்மைவிட்டேய[illegible]னைவிடத் ... *
தோவியம்போனிற்கினனை யள்குவரோபைங்கிளியே ... (௨௮)

தீராக்கருவழக்கைத் தீர்வையிட்டங்கென்னையினிப் ... *
பாரோருதாண்டானைப் பற்றுவனோபைங்கிளியே ... (௨௯)

தூங்கிவிழித்தென்னபலன் றூங்காமற்றூங்கிநிற்கும் ... *
பாங்குகண்டாலன்றோ பலன்காண்பேன்பைங்கிளியே ... (௩௰)

தொல்லைக்கவலை தொலைத்துத்தொலையாத ... ...*
வெல்லையிலாவின்பமய மெய்துவனோபைங்கிளியே ... (௩௧)

நன்னெஞ்சத்தன்பரொல்லா நாதனைச்சேர்ந்தின்பணைந்தார் ...*
வன்னெஞ்சத்தாலேநான் வாழ்விழந்தேன்பைங்கிளியே ...(௩௨)

நானேகருதின்வர நாட்டாச்சும்மாவிருந்தாற் ... ... *
றானேயணைவரவர் தன்மையென்னோபைங்கிளியே ... (௩௩)

நீர்க்குமிழிபோன்றவுட னிற்கையிலேசாகவதஞ் ... *
சேர்க்கவறியாமற் றிகைப்பேனோபைங்கிளியே ... (௩௪)

நெஞ்சகத்தில்வாழ்வார் நினைக்கில்வேறன்றனையார் ... *
வஞ்சகத்தாரல்லரவர் மார்க்கமென்னோபைங்கிளியே ... (௩௫)

பன்முத்திரைச்சமயம் பாழ்படக்கல்லாலடிவாழ் ... *
சின்முத்திரையரசைச் சேர்வனோபைங்கிளியே ... (௩௬)

பச்சைகண்டநாட்டிற் பறக்குமுனைப்போற்பறந்தே ... *
னிச்சையெல்லாமண்ணற் கெய்ப்பிலோபைங்கிளியே ... (௩௭)

பாசபந்தஞ்செய்ததுன்பம் பாராமலெம்மிறைவ ... *
னாசைதந்ததுன்பமதற் காற்றேனோபைங்கிளியே .. (௩௮)

பாராசையற்றிறையைப் பற்றறநான்பற்றிநின்ற ... *
பூராயமெல்லாம் புகன்றுவாபைங்கிளியே ... (௩௯)
பேதைப்பருவத்தே பின்றொடர்ந்தென்பக்குவமுஞ் ... *
சோதித்தவண்ணல்வந்து தோய்வாரோபைங்கிளியே ... (௪௰)
பைம்பயிரைநாடுமுன்போற் பார்பூத்தபைங்கொடிசேர்......*
செம்பயிரைநாடித் திகைத்தேனென்பைங்கிளியே ... (௪௧)
பொய்க்கூடுகொண்டு புலம்புவனோவெம்மிறைவர் ... *
மெய்க்கூடுசென்று விளம்புவாபைங்கிளியே ... ...(௪௨)
பொய்ப்பணிவேண்டேனைப் பொருட்படுத்தியண்ணலென்பான்
மெய்ப்பணியுந்தந்தொருகால் மேவுவனோபைங்கிளியே......(௪௩)
மண்ணுறங்கும்விண்ணுறங்கு மற்றுளவெலாமுறங்குங் ...*
கண்ணுறங்கேனெம்மிறைவர் காதலாற்பைங்கிளியே ... (௪௪)
மட்டுப்படாத மயக்கமெல்லாந்தீரவென்னை ... ... *
வெட்டவெளிவீட்டிலண்ணல் மேவுவனோபைங்கிளியே......(௪௫)
மாலைவளர்த்தென்னை வளர்த்திறைவர்பன்னெறியாம் ... *
பாலைவனத்தில்விட்ட பாவமென்னோபைங்கிளியே ... (௪௬)
மெய்யிநோய்மாற்றவிழ்த்த மெத்தவுண்டெம்மண்ணறந்த ... *
மையனோய்தீர்க்க மருந்துமுண்டோபைங்கிளியே ... [௪௭]
மேவுபஞ்சவண்ணமுற்றாய் வீண்கிறையாலல்லலுற்றாய் ...*
பாவிபஞ்சவண்ணம் பகர்ந்துவாபைங்கிளியே ... ...[௪௮]
வாய்திறவாவண்ணமெனை வைத்தாண்டார்க்கென்றுயரை ... *
நீதிறவாச்சொல்லி நிசமாங்காண்பைங்கிளியே ... [௪௯]
வாட்டப்படாத மவுனவின்பங்கையாலே ... ... *
காட்டிக்கொடுத்தானைக் காண்பேனோபைங்கிளியே ... [௫௰]
வாராவரவாக வந்தருளுமோனருக்கென் ... ... *
பேராசையெல்லாம்போய்ப் பேசிவாபைங்கிளியே ... [௫௧]
விண்ணவர்தம்பாலமுதம் வேப்பங்காயாகவென்பாற் ... *
பண்ணியதெம்மண்ணன்மயல் பார்த்தாயோபைங்கிளியே... [௫௨]
விண்ணுள்வளியடக்கி வேறற்றதென்னவருட் ... ... *
கண்ணுளடங்கிடவுங் காண்பேனோபைங்கிளியே... ... [௫௩]
விண்ணூர்நிலவுதவழ் மேடையிலல்லாருமுற ... ... *
மண்ணுணவீட்டிலென்னை வைத்ததென்னோபைங்கிளியே... [௫௪]
உள்ளத்தினுள்ளே யொளித்திருந்தென்கள்ளமெல்லாம் ...*
வள்ளலறிந்தாலெனக்கு வாயுமுண்டோபைங்கிளியே ... [௫௫]
ஆகத்தைநீக்குமுன்னே யாவித்துணைவரோதான் ... ..*
மோகத்தின்வண்ணந் தழுவுவனோபைங்கிளியே ... ...[௫௬]
நானேசுபாவந் தலைப்படநின்றான்ஞான ... ... *
வானவரும் வருவரோபைங்கிளியே ... ... ...[௫௭]

கள்ளத்தலைவரவர் கைகாட்டிப்பேசாம ... ... ...*
துள்ளத்தில்வந்த வுபாயமென்றோபைங்கிளியே... ... [௫௮]
பைங்கிளிக்கண்ணி-முற்றுப்பெற்றது-ஆக-௫௮௨.

# எந்நாட்கண்ணி.

## தெய்வவணக்கம்.

நீர்பூத்தவேணி நிலவெறிப்பமன்றுமெங் ... ... *
கார்பூத்தகண்டனையான் காணுநாளெந்நாளோ ... [௧]
பொன்றுருமன்றுண்மணிப் பூவைவிழியண்டுசுற்று ... *
மென்றாமுதிலை யிச்சிப்பதெந்நாளோ ... ... [௨]
நீக்கமலக்கட்டறுத்து நேரேவெளியிலெம்மைத் ... *
தூக்கிவைக்குந்தாளைத் தொழுகிறநாளெந்நாளோ ... [௩]
கருமுகங்காட்டாமலென்றுங் கர்ப்பூரம்வீசுந் ... *
திருமுகமேநோக்கித் திருக்கறுப்பதெந்நாளோ... ... [௪]
வெஞ்சேலெனும்விழியார் வேட்கைதருஞ்சுக்கஞ்சினை ...*
பஞ்சேலெனுங்கைக் கபயமெய்பதெந்நாளோ ... [௫]
ஆறுசமயத்து மதுவதுவாய்நின்றிலங்கும் ... *
வீறுபரைதிருத்தாள் மேவுநாளெந்நாளோ... ... [௬]
பச்சைநிறமாய்ச்சிவந்த பாகங்கலந்துலகை... ... *
யிச்சையுடனீன்றுளை யாக்காண்பதெந்நாளோ ... ...[௭]
ஆதியந்தங்காட்டா தகண்டிதமாய்நின்றுணர்த்தும் ... *
போதவடிவானடியைப் போற்றுநாளெந்நாளோ ... [௮]
கங்கைநிலவுசடைக் காட்டானைதந்தையெனும் ... ...*
புங்கவெண்கோட்டானைபதம் புந்திவைப்பதெந்நாளோ ... [௯]
அஞ்சுமுகங்காட்டாம லாறுமுகங்காட்டவந்த ... ... *
செஞ்சரணச்சேவடியைச் சிந்தைவைப்பதெந்நாளோ ... [௰]
தந்தையிருதாபணிந்துத் தம்பிரான்றன்சேர்ந்த ... *
வெந்தையிருதாளிணைக்கே யின்புறுவதெந்நாளோ ...[௰௧]
முற்றீற்று-ஆக-௬௯.

## குருமரபின்வணக்கம்.

துப்பகரமலராற் சொல்லாமற்சொல்லுண்மை ... ...*
பையனைக்கல்லாலரசை யாயணைவதெந்நாளோ ... ...[௧]
சிந்தையினுக்கெட்டாத சிற்சுகத்தைக்காட்டவல்ல ... *
நந்தியடிக்கீழ்க்குடியாய் நாமணைவதெந்நாளோ ... [௨]
எந்தைசனற்குமாரனுமெமையாட்கொள்வான் ... *
வந்ததவத்தினரை வாழ்த்துநாளெந்நாளோ ... ... ...[௩]

பொய்கண்டார்காணாப் புனிதமெனுமத்துவித ... ...*
மெய்கண்டநாதனருண் மேவுநாளெந்நாளோ ... ...[௪]
பாதிவிருத்தத்தாலிப் பார்விருத்தமாகவுண்மை ... *
சாதித்தார்பொன்னடியைத் தாண்பணிவதெந்நாளோ ..[௫]
சிற்றம்பலமன்னுஞ் சின்மயராந்தில்லைநகர்க் ... *
கொற்றங்குடிமுதலைக் கூறுநாளெந்நாளோ ... ..[௬]
குன்றவிலருண்ஞானமுதல் கொற்றங்குடியடிக ... *
ணறைமலர்த்தாட்கன்புபெற்று நாமிருப்பதெந்நாளோ ... [௭]
நாளவங்கள்போகாம னன்னெறியைக்காட்டியெமை ... *
யாளவந்தகோலங்கட் கன்புவைப்பதெந்நாளோ ..... [௮]
என்னறிவையுள்ளடக்கி யென்போல்வருமவுனி ... *
தன்னறிவுக்குள்ளேநான் சாருநாளெந்நாளோ ... ...[௯]
ஆறுமொன்றைநாடினதற் காறுமுண்டாமென்றெமக்குக் ...*
கூறுமவுனியருள் கூடுநாளெந்நாளோ ... ... [௰]
நில்லாமனின்றருளே நேரோபாயென்றவொரு ... ...*
சொல்லான்மவுனியரு டோற்றுநாளெந்நாளோ ... [௰௧]
வைதிகமாஞ்சைவ மவுனிமவுனத்தளித்த ... ...*
மெய்திகழ்ந்தென்னல்லல் விடியுநாளெந்நாளோ ... [௰௨]
வாக்குமனமற்ற மவுனிமவுனத்தருளே ... ... *
தாக்கவுமென்னல்லலெல்லாந் தட்டழியதெந்நாளோ ...[௰௩]

முற்றிற்று - ஆக - ௩௱௫.

# அடியார்வணக்கம்.

வெம்பந்தந்தீர்த்துலகாள் வேந்தன்றிருஞான ... *
சம்பந்தனையருளாற் சாருநாளெந்நாளோ ... ..[௧
ஏரின்சிவபோக மிங்கிவர்க்கேயென்னவுழ ... ... *
வாரங்கொள்செய்கையர்தாள் வாரம்வைப்பதெந்நாளோ ... [௨
பித்தரிறையென்றறிந்து பேழைபாற்றூதனுப்பு ... *
வித்ததமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வதெந்நாளோ ... [௩
போதவூர்நாடறிய புத்தர்தமைவாதில்வென்ற ... *
வாதவூரையனன்பை வாஞ்சிப்பதெந்நாளோ ... ... [௪
ஓட்டுடன்பற்றின்றி யுலகைத்துறந்தசெல்வப் ... ... *
பட்டினத்தார்பத்ரகிரி பண்புணர்வதெந்நாளோ ... [௫
கண்டதுபொய்யென்றகண்டா காரசிவமெய்யெனவே ... *
விண்டசிவவாக்கியர்தாண் மேவுநாளெந்நாளோ ... [௬
சக்கரவர்த்தி தவராஜயோகியெனு ... ... ... *
மிக்கதிருமூலனருண் மேவுநாளெந்நாளோ... ... ...(௭

கந்தானுபூதிபெற்றுக் கந்தானுபூதிசொன்ன ... ... *
வெற்றையருணகிரியிருக்குநாளெந்நாளோ ... ... [௮]
எண்ணரியசித்திமைபோர்முதலான ... ... ... *
பண்ணவர்கள்பத்தருள் பாலிப்பதெந்நாளோ ..... [௯]

முற்றிற்று - ஆகூ - த்ராயகு.

## யாக்கையைப்பழித்தல்.

சுக்கிலமுதிருஞ் சோரிமலமுநாறுமுடற் ... ...*
புக்குழலும்வாஞ்சையினிப் போதுமென்பதெந்நாளோ........[௧]
நீர்க்குமிழிபூணமைத்து நின்றாலுநில்லாமெய் ... ...*
பார்க்குமிடத்ததின்மேற் பற்றறுவதெந்நாளோ ... [௨]
காக்கைநரிசெந்நாய் கழுகொருநாள்கூடியுண்டு ... *
தேக்குவிருந்தாமுடலைச் சீயென்பதெந்நாளோ ... ..[௩]
செங்கிருமியாதி செனித்தசெனனபூமியினை ... ... *
யிங்கெனுடலென்று மிழுக்கொழிவதெந்நாளோ ... [௪]
தத்துவர்தொண்ணூற்றறுவர் தாமாய்வாழிந்நாட்டைப் ...*
பித்தனெனென்னும் பிதற்றொழிவதெந்நாளோ ... ...[௫]
ஊனென்றிநாதனுணர்த்துமறைவிட்டறிவே ... *
னென்றபாவிதலை நாணுநாளெந்நாளோ ... [௬]
வேலையிலாவேதன் விதித்தவிந்த்ரசாலவுடன் ... *
மாலைவியாபார மயக்கொழிவதெந்நாளோ ... [௭]
ஆழ்ந்துநினைக்கி னரோசிகமாமிவ்வுடலில் ... ... *
வாழ்ந்துபெறும்பேற்றை மதிக்குநாளெந்நாளோ ... [௮]
மும்மலச்சேறுண முழுக்கும்பிபாகமெனு ... *
நிம்மலகாயத்து ளிகழ்ச்சிவைப்பதெந்நாளோ... ... [௯]
நாற்றமிகக்காட்டு நவவாயில்பெற்றபசுஞ் ... *
சோற்றுத்துருத்தி சுமைமென்பதெந்நாளோ ... ... [௰]
உருவிருப்பவுள்ளேதா னூறுமலக்கேணி ... ... *
பருவருப்புவாழ்க்கையைக்கண் டஞ்சுநாளெந்நாளோ ... [௰௧]

முற்றிற்று - ஆக - தூாஉசு.

## மாதரைப்பழித்தல்.

மெய்வீசுநாற்றமெல்லாமிக்கமஞ்சளான்மறைத்துப் ... *
பொய்வீசும்வாயார் புலையொழிவதெந்நாளோ ... [௧]
திண்ணியநெஞ்சப்பறவைசிக்கக்குழற்காட்டிற் ... *
கண்ணிவைப்போர்மாயங்கடக்குநாளெந்நாளோ ... [௨]

கண்டுமொழி[illegible]மனங் கண்டுகொண்டுவைவிலைபாக் ... *
கொண்டுவிடுமொருத்திபொய்க் கூத்தொழிவதெந்நாளோ ... (௩)
காமனைவாவென்றிருண்டகண்வலையைவீசுமின்னார் ... *
நாமமறந்தருளைநண்ணுநாளெந்நாளோ ... ...(௪)
கண்களில்வெண்பூளைகரப்பக்கருமையிட்ட *
பெண்கண்மயறப்பிப்பிழைக்குநாளெந்நாளோ ... (௫)
வீங்கித்தளர்ந்துவிழுமுலையார்மேல்விழுந்து ... *
தூங்குமதன்சோம்பைத் துடைக்குநாளெந்நாளோ ...(௬)
கச்சிருக்குங்கொங்கைகரும்பிருக்குமின்மாற்றம்... ...*
வைச்சிருக்குமாதர்மயக்கொழிவதெந்நாளோ ... [௭]
பச்சென்றகொங்கைப்பசப்பியர்பாழானமய ... *
லைச்சென்றறிந்தருளைநண்ணுநாளெந்நாளோ ... ...[௮]
உந்திச்சுழியாலுளத்தைச்சுழித்தகனை ... ... *
தந்தித்தனத்தார்தமைமறப்பதெந்நாளோ ... [௯]
தட்டிவைத்தசேலைகொய்சகத்திற்சிந்தையெல்லாங் ... *
கட்டிவைக்குமாயமின்னார்கட்டழிவதெந்நாளோ ... [௰]
ஆழாழியென்னவளவுபடாவஞ்சநெஞ்சப் ... *
பாழானமாதர்மயற்பற்றொழிவதெந்நாளோ... ... [௰௧]
தூயபனித்திங்கள்சுடுவதெனப்பிற்றேற்று ... ... *
மாயமடவார்மயக்கொழிவதெந்நாளோ ... ... (௰௨)
ஏழைக்குறும்புசெயுமேந்திழையார்மோகமெனும் ... *
பாழைக்கடந்துபயிராவதெந்நாளோ ... ... (௰௩)
விண்டுமொழிகுளறிவேட்கைமதுமொண்டுதருந் ... *
தொண்டியர்கள்கட்சடையிற்சுற்றொழிவதெந்நாளோ ... (௰௪)
மெய்யிற்சிவம்பிறக்கமேவுமின்பம்போன்மாதர் ... *
பொய்யிலின்பின்றென்றுபொருந்தாநாளெந்நாளோ ... (௰௫)

முற்றிற்று - ஆக - ௲௪௧

# தத்துவமுறைமை.

ஐம்பூதத்தாலேயலக்கழிந்ததோஷமற ... ... *
வைம்பூதநாதனருளெய்துநாளெந்நாளோ ... (௧)
பித்தாதிமுதலாம்புலனிற்சஞ்சரித்தகள்வரொடும் ... *
நாலுபயந்தீர்ந்துபிழைக்குநாளெந்நாளோ ... ... (௨)
பாரும்பொறிவழியைநாடானவண்ணமைமை ... ...*
வாக்காதியரியாலருள்வருவதெந்நாளோ ... ...(௩)
போக்காமலுண்டென்மமாவைதம்பால்வீண்காலம் *
பொருந்துநாளெந்நாளோ ... (௪)

எம்மைவினையையிறையையெம்பாற்காட்டாத ... ... *
வெம்மைதிரோதையகலுநாளெந்நாளோ ... ...(௨௪)
நித்தியமாய்வந்துநின்றுவழிக்குங்கேவலமாஞ் ... ... *
சத்துருவைவெல்லுஞ்சமர்த்தறிவதெந்நாளோ... ... [௨௫]
சன்னல்பின்னலானசகலமெனுங்குப்பையிடை ... *
முன்னவன்ஞானக்கனலைமூட்டுநாளெந்நாளோ ... [௨௬]
மாயாவிகாரமலமொழியசுத்தாவத்தைத் ... ... *
தோயாவருளைத்தொடருநாளெந்நாளோ ... [௨௭]

முற்றிற்று- ஆக- ௩௱௪௮.

---

## தன்னுண்மை.

உடம்பறியுமென்னுமந்தவூழலெல்லாந்தீரத் ... *
திடம்பெறவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ ... (௧)
செம்மையறிவாலறிந்துதேகாதிக்குள்ளிசைந்த ... ...*
வெம்மைப்புலப்படவேயாமறிவதெந்நாளோ .. ... [௨]
தத்துவமாம்பாழ்த்தசடவுருவைத்தான்சுமந்த ... ... *
சித்துருவாமெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ ... [௩]
பஞ்சப்பொறியையுயிரென்னுமந்தப்பஞ்சமறச் ... *
செஞ்செவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ ... ..[௪]
அந்தக்கரணமுயிராமென்றவந்தரங்க ... ... *
சிந்தைக்கணத்திலெம்மைத்தேர்ந்தறிவதெந்நாளோ ... [௫]
முக்குணத்தைச்சீவனென்றுமூடத்தைவிட்டருளா ... *
லக்கணமேயெம்மையறிந்துகொள்வதெந்நாளோ ... [௬]
காலையுயிரென்னுங்கலாதிகள்சொற்கேளாமற் ... ... *
சீலமுடனெம்மைத்தெளிந்துகொள்வதெந்நாளோ ... [௭]
வான்கெடுத்துத்தேடிமதிகேடர்போலவெமை ... ...*
நான்கெடுத்துத்தேடாமனன்கறிவதெந்நாளோ ... [௮]

முற்றிற்று - ஆக- ௩௱௫௬;

## அருளியல்பு.

ஊனந்தருமுடிதாமக்குவேண்டாமென் ... ... *
றானந்தநாட்டிலவதரிப்பதெந்நாளோ ... ... ... [௧]
பொய்க்காட்சியானபுவனத்தைவிட்டருளா ... ... *
மெய்க்காட்சியாம்புவனமேவுநாளெந்நாளோ ... ... [௨]
ஆதியந்தங்காட்டாமலம்பரம்போலேநிறைந்த ... *
நீதியருட்கடலைச்சேருநாளெந்நாளோ ... ... .. [௩]
எட்டுத்திசைக்கீழ்மேலெங்கும்பெருகிவரும் ... *
வெட்டவெளியினூற்றின்மெய்தோய்வதெந்நாளோ ... [௪]

ஞானமென்றசுருதியெல்லாமோலமிடு ... *
மீதானமானவெற்பைமேவுநாளெந்நாளோ .. ... [௫]
வெந்துவெடிக்கின்றசிந்தைவெப்பகலத்தண்ணருளாய் ... *
வந்துபொழிகின்றமழைகாண்பதெந்நாளோ ... (௬)
சூரியர்கள்சந்திரர்கடோன்றச்செயஞ்சோதிப் ... *
பூரணதேயத்திற்பொருந்துநாளெந்நாளோ ... ... (௭)
கன்றுமனவெப்பக்கலக்கமெலாந்தீரவருட் ... *
டென்றல்வந்துவீசுவெளிசேருநாளெந்நாளோ ... (௮)
கட்டுநமன்செங்கோல்கடாவடிக்குங்கோலாக ... ... *
வெட்டவெளிப்பொருளைமேவுநாளெந்நாளோ ... (௯)
சாலக்கபாடத்தடைதீரவெம்பெருமா ... ... *
னோலக்கமண்டபத்துளோடுநாளெந்நாளோ ... (௰)
விண்ணவன்றானென்னும்வெரிநிலாமண்டபத்திற் ... *
றண்ணீருந்தித்தளர்வொழிவதெந்நாளோ ... (௰௧)
வெய்யபுலிபார்த்துவிழித்திருந்தவல்லலறத் ... *
துய்யவருளிற்றுயிலுநாளெந்நாளோ ... ... (௰௨)
வெய்யபிறவியினிலவெப்பமெலாம்விட்டகல ... *
வையனடிநீழலணையுநாளெந்நாளோ .. ... ...(௰௩)
வாதைப்பிறவிவலைகடலைநீந்தவையன் ... ... ...*
பாதப்புணையிணையைப்பற்றுநாளெந்நாளோ ... (௰௪)
ஈனமில்லாமெய்ப்பொருளாயின்மையிலேகாணவெளி ...*
ஞானமெனுமஞ்சனத்தைநான்பெறுவதெந்நாளோ ... [௰௫]
எல்லாமிறந்தவிடத்தெந்தைநிறைவாம்வடிவைப் ... *
புல்லாமற்புல்லிப்புணருநாளெந்நாளோ ... [௰௬]
சடத்துளுயிர்போலெமக்குத்தாயினுயிராய்ஞான ... *
நடத்துமுறைகண்டுபணிநாம்விடுவதெந்நாளோ ... [௰௭]
எக்கணுமாந்துன்பவிருட்கடலைவிட்டருளா ... *
மிக்ககரையேறிவெளிப்படுவதெந்நாளோ ... [௰௮]

முற்றிற்று - ஆக - ௲௱௪.

## பொருளியல்பு.

கைவிளக்கின்பின்னேபோய்க்காண்பார்போன்மெய்ஞ்ஞான ..*
மெய்விளக்கின்பின்னேபோய்மெய்காண்பதெந்நாளோ ... (௧)
கேடில்பசுபாசமெல்லாங்கீழ்ப்படவுந்தானேமே ... *
லாடுஞ்சுகப்பெருக்கன்புறுவதெந்நாளோ ... (௨)
ஆணவத்தைநீக்கியறிவுடையைவகையாய்க் ... ...*
காணவத்தைக்கப்பாலைக்காணுநாளெந்நாளோ ... (௩)

நீக்கப்பிரியாநினைக்கமறக்கக்கூடாப் ... ... *
போக்குவரவற்றபொருளனைவதெந்நாளோ ... (௪)
அண்டருக்குமெய்ப்பில்லைப்பாமாறாமுந்தையென்னகத்திற்... *
கண்டுகொண்டுநின்றுகளிக்குநாளெந்நாளோ ... (௫)
காட்டுந்திருவருளேகண்ணாகக்கண்டுபா ... ... *
வீட்டின்பமெய்ப்பொருளைமேவுநாளெந்நாளோ ... (௬)
நானெனுந்தன்மைநழுவியேயெவ்வுயிர்க்குந் ... *
தானெனவுண்மைதனைச்சாருநாளெந்நாளோ ... (௭)
சிந்தைமறந்துதிருவருளாய்நிற்பவர்பால் ... ... *
வந்தபொருளெம்மையுந்தான்வாழ்விப்பதெந்நாளோ ...(௮)
எள்ளுக்குளெண்ணெய்போலெங்கும்வியாபகமா... ...*
யுள்ளவொன்றையுள்ளபடியோருநாளெந்நாளோ ... (௯)
அருவுருவமெல்லாமகன்றதுவாயான... ... ... *
பொருளெமக்குவந்துபுலப்படுவதெந்நாளோ ... (௰)
ஆரணமுங்காணவகண்டிதாகாரபரி... ... ... ...*
பூரணம்வந்தெம்மைப்பொருந்துநாளெந்நாளோ ...(௰௧)
சத்தொடுசித்தாகித்தயங்கியவானந்தபரி ... ...*
சுத்தவகண்டசிவந்தோன்றுநாளெந்நாளோ... ... . (௰௨)
எங்கெங்கும்பார்த்தாலுமின்புருவாய்நீக்கமின்றித் ... *
தங்குந்தனிப்பொருளைச்சாருநாளெந்நாளோ ... (௰௩)
அடிமுடிகாட்டாதசுத்தவம்பரமாஞ்சோதிக்... ... *
கடுவெளிவந்தென்னைக்கலக்குநாளெந்நாளோ ... (௰௪)
ஒன்றனையுங்காட்டாவுளத்திருளைக்குறையிட்டு ... *
நின்றபராஞ்சோதியுடனிற்குநாளெந்நாளோ ... ... (௰௫)
எந்தச்சமயமிசைந்துமறிவூடறிவாய் ... ... *
வந்தபெருளேபொருளாவாஞ்சிப்பதெந்நாளோ ... (௰௬)
எவ்வாறிங்குற்றுணர்ந்தார்யாவாவர்தமக்கே ... ... *
யவ்வாறாய்நின்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ ... (௰௭)
பெண்ணாணலியெனவும்பேசாமலென்னறிவின் ... *
கண்ணூடேநின்றவொன்றைக்காணுநாளெந்நாளோ ... (௰௮)
நினைப்புமறப்புமறநின்றபராஞ்சோதி ... ... ... *
தனைப்புலமாவென்னறிவிற்சந்திப்பதெந்நாளோ ... (௰௯)

முற்றிற்று - ஆக - ௲௨௱௰௫.

## ஆனந்தவியல்பு.

பேச்சழுச்சில்லாதபேரின்பவெள்ளமுற்று ... *
நீச்சறிலகாணாமனிற்குநாளெந்நாளோ ... ... (௧)

சித்தந்தெளிந்தோர்தெளிவித்தெளிவான ... ... ✽
சுத்தசுகக்கடலுட்டோயுநாளெந்நாளோ ... ... (௨)
சிற்றின்பமூண்டுழன்றசிந்தையகன்றக்கடல்போல் ... ✽
முற்றின்பவெள்ளமெனைமேமூடுநாளெந்நாளோ ... ...(௩)
எல்லையில்பேரின்பமயமெப்படியென்றோர்தமக்குச் ... ✽
சொல்லறியாதுமவர்கள்போற்சொல்லுநாளெந்நாளோ........(௪)
அண்டாண்டகோடியனைத்துமுகாந்தவெள்ளங் ... ✽
கொண்டதெனப்பேரின்பக்கூடுநாளெந்நாளோ ... (௫)
ஆதியந்தமில்லாதவாதியனுபூதியெனுஞ் ... ... ✽
சோதியின்பத்தூடேதுனையுநாளெந்நாளோ ... (௬)
சாலோகமாதிசவுக்கியமும்விட்டநம்பான் ... ... ✽
மேலானஞானவின்பமேவுநாளெந்நாளோ ... (௭)
தற்பாதநிலுள்ளேயுஞ்சாலோகமாதியெனும் ... ✽
பொற்பறிந்தானந்தம்பொருந்துநாளெந்நாளோ ... (௮)
உள்ளத்திணுள்ளேதானூறுஞ்சிவானந்த ... ... ✽
வெள்ளந்தனைநாந்துவிடாய்தீர்வதெந்நாளோ ... (௯)
கன்னலுடன்முக்கனியுங்கற்கண்டுஞ்சீனியுமாய் ... ✽
மன்னுமின்பவாரமுதைவாய்மடுப்பதெந்நாளோ ... (௰)
மலநாசமுற்றமயக்கமெல்லாந்தீர்ந்திடவும் ... .. ✽
விண்ணூடமுந்தசுகமேவுநாளெந்நாளோ ... ... (௰௧)
கானற்சலம்போன்றகட்டுமூழலைப்பொய்த்தி ... ✽
வானமுதவாவிமருவுநாளெந்நாளோ... ... ...(௰௨)
தீங்கரும்பென்றுவினியாதின்றுவினிப்பனபோற் ... ✽
பாங்குறும்பேரின்பம்படைக்குநாளெந்நாளோ ... (௰௩)
புண்ணியபாவங்கள்பொருந்தாமெய்யன்பரெல்லா ... ✽
நண்ணியபேரின்பசுகநாமணைவதெந்நாளோ ... (௰௪)

முற்றிற்று- ஆக- ௲உ௨௧..

---

## அன்புநிலைமை.

தக்கரவிகண்டசரோருகம்போலென்னிதய ... ... ✽
மிக்கவருள்கண்டுவிகசிப்பதெந்நாளோ ... ... (௧)
வானமுகில்கண்டமயூரபக்ஷிபோலவையன் ... ... ✽
ஞானநடங்கண்டுநடிக்குநாளெந்நாளோ ... ... (௨)
சந்திரனைநாடுஞ்சகோரபக்ஷிபோலறிவின் ... ... ✽
வந்தபரஞ்சோதியையாம்வாஞ்சிப்பதெந்நாளோ ... (௩)
குத்திரமெய்ப்புற்றகத்துக்குண்டலிப்பாம்பொன்றுட்டுஞ் ... ✽
சித்தனையென்கண்ணூற்றெரிசிப்பதெந்நாளோ ... [௪]

அந்தரத்தேநின்றுமோனத்தக்கூத்தனுக்கென்... ...
சிந்தைதிறைகொடுத்துச்சேவிப்பதெந்நாளோ ... [௫
கள்ளனிவனென்றுமென்னைக்கைவிடுதல்காரியமோ ...
வள்ளலேயென்றுவருந்துநாளெந்நாளோ ... [௬
விண்ணாட்டர்காணவிமலாபரஞ்சோதி ... ...
பண்ணுவாவாவென்றாற்றுநாளெந்நாளோ ... [௭
ஏதுசெய்தாலுமென்பணிபோநின்பணியா ...
மாதேவாவென்றுவருந்துநாளெந்நாளோ ... [௮
பண்டுங்காணேனுன்பழம்பொருளேயின்றுனைக் ...
கண்டுங்காணேனெனவுங்கைகுவிப்பதெந்நாளோ ... [௯
பொங்கேதமானபுழுக்கமெல்லாந்திரவின்ப ... ...
மெங்கேயெங்கேயென்றிரங்குநாளெந்நாளோ ... [௰
கடலின்மடைகண்டதுபோற்கண்ணீராறாக ...
வுடல்வெதும்பிமூர்ச்சித்துருகுநாளெந்நாளோ ... [௰௧
புலர்ந்தேன்முகஞ்சருகாய்ப்போனேனிற்காண ... *
வலந்தேனென்றேங்கியழுங்குநாளெந்நாளோ ... [௰௨]
புண்ணீர்மையாளர்புலம்புமாபோற்புலம்பிக் ... *
கண்ணீருங்கம்பலையுங்காட்டுநாளெந்நாளோ ... (௰௩)
போற்றேனென்றாலுமெனைப்புந்திசெய்யும்வேதனைக்கிங் ...*
காற்றேனாற்றேனென்றாற்றுநாளெந்நாளோ ... (௰௪)
பொய்மூடங்கும்பூமிசிலபோட்டலறப்பூங்கமலன் ... *
கைமூடங்கநான்சனனக்கட்டறுவதெந்நாளோ ... (௰௫)
சற்குணத்தைப்போன்றவஞ்சக்காரர்கள்கைகோராம ... *
நற்குணத்தார்கைகோத்துநான்பிரிவதெந்நாளோ ... (௰௬)
துட்டனைமாமாயைச்சுழனீக்கியெத்தாமே ... ...*
விட்டனையேயென்றுவியக்குநாளெந்நாளோ ... (௰௭)

மூற்றிற்று - ஆக - ௩௨௪௪.

---

## அன்பர்நெறி

அத்துவாவெல்லாமடங்கச்சோதித்தபடிச் ... *
சித்துருவாய்நின்றார்தெளிவறிவதெந்நாளோ ... ... (௧)
மூச்சற்றுச்சிந்தைமுயற்சியற்றுமூதறிவாய்ப் ... *
பேச்சற்றோர்பெற்றவொன்றைப்பெற்றிடுநாளெந்நாளோ ...(௨)
கோட்டாலையானகுணமிறந்தநிர்க்குணத்தோர் ... *
தேட்டாலேதேடுபொருள்சேருநாளெந்நாளோ ... (௩)
கெடுத்தேபகுத்துவத்தைக்கேடிலாவானந்த ... *
மடுத்தோரடுத்தபொருட்கார்வம்வைப்பதெந்நாளோ ... (௪)

கற்கண்டாலோடுகின்றகாக்கைபோற்பொய்ம்மைப் ... *
சாற்கண்டாலோடுமன்பர்சேர்தாய்வழியதெந்நாளோ ... (௬)
மெய்த்தகுலங்கல்வியுங்கேவேடமெல்லாமோடவிட்ட ..*
த்தவொன்றுஞ்சேராச்செயலறிவதெந்நாளோ ... (௭)
குற்றச்சமயக்குறும்படர்ந்துதற்போத ... ... *
ற்றவர்கட்சற்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ ... (௮)
தர்க்கமிட்டுப்பாழாஞ்சமயக்குதர்க்கமிட்டு ... *
ற்றுமவர்கண்டவழிநேர்பெறுவதெந்நாளோ .. ... (௯)
வீறியவேதாந்தமுதன்மிக்ககாலாந்தவனா ... ... ✿
ாறுமுணர்ந்தோருணர்வுககன்புவைப்பதெந்நாளோ ... (௰)
கண்டவிடமெல்லாங்கடவுண்மயமென்றறிந்து ... .. *
கொண்டநெஞ்சர்நேயநெஞ்சிற்கொண்டிருப்பதெந்நாளோ (௰௧)
பாக்கியங்களெல்லாம்பழுத்துனெய்பழுத்தோர் ... ✿
நோக்குந்திருக்கூத்தைநோக்குநாளெந்நாளோ ... (௰௨)
எவ்வுயிருந்தன்னுயிர்போலெண்ணுந்தபோதனர்கள் ... *
செவ்வறிவைநாடிமிகச்சிந்தைவைப்பதெந்நாளோ ... (௰௩)

முற்றிற்று- ஆக- ருஉருசு.

---

# அறிஞருரை

---

இருநிலனாய்த்தீயாகியென்றதிருப்பாட்டின் ... ... *
பெருநிலையைக்கண்டணைந்துபேச்சறுவதெந்நாளோ .. (௧)
அற்றவர்கட்கற்றசிவனாமென்றவத்துவித ... ...*
முற்றுமொழிகண்டருளின்மூழ்குநாளெந்நாளோ ... (௨)
தானென்னைமுன்படைத்தானென்றதகவுரையை ... *
நானென்றுவுண்மைபெற்றுநாமுணர்வதெந்நாளோ ... (௩)
என்னுடையதோழனுமாயென்றதிருப்பாட்டி ... ...*
னன்னெறியைக்கண்டுரிமைநாஞ்செய்வதெந்நாளோ ... (௪)
ஆருடனேசேருமறிவென்றவவ்வுரையைத் ... *
தேரும்படிக்கருடான்சேருநாளெந்நாளோ ... ... (௫)
உன்னிலுன்னுமென்றவுறுமொழியாலென்னிதயந் ... *
தன்னிலுன்னிநன்னெறியைச்சாருநாளெந்நாளோ ... (௬)
நினைப்பறவேதானினைத்தேனென்றநிலைநாடி ... ... *
யனைத்துமாமப்பெருளிலாழுநாளெந்நாளோ ... (௭)
சென்றுசென்றேயணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாகி *
நின்றுவிடுமென்றநெறிநிற்குநாளெந்நாளோ ... (௮)
ஆதியந்தமில்லாவரியபராஞ்சோதி... ... ... *
நீதிமொழிகண்டதுவாய்நிற்குநாளெந்நாளோ ... ...(௯)

பிறிதொன்றிலாசையின்றிப்பெற்றிருந்தேனென்ற
நெறியுடையான்செல்வினிலைநிற்குநாளெந்நாளோ ...
திரையற்றநீர்போற்றெளிபவெனத்தேர்ந்த ...
வுரைபற்றியுற்றங்கொடுக்குநாளெந்நாளோ ... ...
அறியாவறிவிலமிழ்ந்தேறவென்ற ... ...
நெறியாமுறையுணர்ந்துநிற்குநாளெந்நாளோ ...
எனக்குணியென்றுமியற்கையாப்பின்னு ... ...
முனக்குறனென்றவுறுதிகொள்வதெந்நாளோ ...
அறிவையறிவதுவேயாகும்பொருளென் ... ...
றுறுதிசொன்னவுண்மையினையோருநாளெந்நாளோ ...

முற்றிற்று - ஆக - கஉஎ.

## நிற்குநிலை.

பண்ணினிசைபோலப்பரமன்யாதின்றதிர ...
னெண்ணியருளாகியிருக்குநாளெந்நாளோ ...
அறிவோடறியாமையற்றறிவினூடே ... ...
குறியிலறிவுவந்துகூடுநாளெந்நாளோ ... ...
சொல்லான்மனத்தாற்றொடராச்சப்பூரணத்தி ...
னில்லாநிலையாய்நிலைநிற்பதெந்நாளோ .. ...
செங்கதிரின்முன்மறியந்தேசடங்கிநின்றிடல்போ ...
லங்கணனார்தாளிலடங்குநாளெந்நாளோ ... ...
வானூடடங்கும்வளிபோலவின்புருவாங் ...
கோனூடடங்குங்குறிப்பறிவதெந்நாளோ ... ...
செப்பரியதன்கருணைச்சிற்சுகனார்பூரணத்தி ... ..
லப்பினிடையுப்பாயணையுநாளெந்நாளோ ... ...
தூயவறிவானசுகரூபசோதிதன்பாற் ... ... ..
தீயினிரும்பென்னத்திகழுநாளெந்நாளோ ... ...
தீதனையாக்கர்ப்பூரதீபமென நானகண்ட ...
சோதியுடனொன்றித்துரிசறுவதெந்நாளோ ... ... [அ]
ஆராருங்காணுதவற்புதனார்பொற்படிக்கீழ் ... ... *
நீரார்நிழல்போனிலாவுநாளெந்நாளோ ... ... [கூ]
எட்டத்தொலையாதவெந்தைபிரான்சன்னிதியிற் ... .. *
பட்டப்பகல்விளக்காய்ப்புன்புறுவதெந்நாளோ... .. [ய]
கருப்புவட்டைவாய்மடுத்துக்கண்டார்தாட்போல ... *
விருப்புவட்டாவில்புருவைமேவுநாளெந்நாளோ ... [யக]
துச்சப்புலனூற்சுழலாமற்றன்னருளா ... ... *
லச்சிக்கதிர்படிகமொவ்வுநாளெந்நாளோ ... [யஉ]

ஞானநெறிதானே நழுவிடினு முப்பதத்து ... *
ஈனமுற்றி நல்குமெனை யன்புறுவதெந்நாளோ ... (௨)
பன்மார்க்கமான பலவடிபட்டேனுமொரு ... ... *
சொன்மார்க்கங்கண்டு துலங்குநாளெந்நாளோ ... (௩)
அத்துவிதமென்ற வன்னியச்சொற்கண்டுணர்ந்து ... *
சுத்தசிவத்தை தொடருநாளெந்நாளோ .. ... (௪)
கேட்டலின்றுதன் ஞானகாலே கேடிலாநாற்பதமும்... .. *
வாட்டமறவெமக்கு வாய்க்குநாளெந்நாளோ .. ... (௫)
என்னையியானென்பதற வெவ்விடமுமென்னுசான் ... *
சன்னிதியாக்கண்டிட்டை சாதிப்பதெந்நாளோ... ... (௬)
நாம்பிரமமென்று நடுவேயொன்றுண்டாமா ... *
றேயப்பியெல்லாமொன்றாய்த் திகழுநாளெந்நாளோ ... (௭)
மூசசகமேயாதி முழுதுமகண்டாகார... ... ... *
சச்சிதானந்தசிவந் தானென்பதெந்நாளோ... .... (௮)
எவ்வடிவும்பூரணமா மெந்தையுருவென்றிசைந்த ... *
வவ்வடிவுக்குள்ளே யடங்குநாளெந்நாளோ ... ...(௯)
சிந்தித்ததெல்லாஞ் சிவபூரணமாக ... ... *
வந்தித்துவாழ்த்தி வணங்குநாளெந்நாளோ ... ... (௰)
தாங்கியபார்வின்றுதி தானேஞானாக்கினியா ... ... *
யோங்குமியோகவுணர் வுற்றிடுநாளெந்நாளோ ... (௰௧)
ஆசனமூர்த்தங்க ளறவகண்டாகாரசிவ ... ... *
பூசைசெயவாசை பொருந்துநாளெந்நாளோ ... (௰௨)
அஞ்செழுத்தினுண்மை யறிவானவட்பொருளோ... ... *
நெஞ்சழுத்தியொன்றாகி நிற்குநாளெந்நாளோ ... (௰௩)
அவ்வுயிர்போலெவ்வுயிரு மனைபிரான்றன்னடிமை ... *
யெவ்வுயிருமென்றுபணி யாஞ்செய்வதெந்நாளோ ... (௰௪)
தேசிகர்கோனை திறன்மவுனிநந்தமக்கு ... ... *
வாசிகொடுக்கமகிழுநாளெந்நாளோ ... ... (௰௫)
குருலிங்கசங்கமமாக் கொண்டதிருமேனி ... *
யருண்மயமென்றல்புற்றருள்பெறுவதெந்நாளோ ... (௰௬)

எந்நாட்கண்ணி முற்றிற்று - ஆக-௩௱௰௪,



## காண்பேனோவென்கண்ணி.

சிந்திக்குந்தோறுந் தெவிட்டாவமுதேயென் ... *
புந்திக்குணீதான் பொருந்திடவுங்காண்பேனோ... ... (௧)
கேவலத்திலுன்கிடந்து கேடுபடாதின்பவருட் ... *
காவலன்பாலொன்றிக்கலந்திடவுங்காண்பேனோ.. ... (௨)

ஆடுங்கறங்காயகிலமதிலுழன்றமனம் ... *
வாடுமனையையாநீவாவெனவுங்காண்பேனோ ... [௨௨]
சிட்டர்க்கெளியசிவனேயோதீவினையேன் ... ✡
பட்டற்றவாசைமயக்கறவுங்காண்பேனோ ... [௨௩]
உண்ணின்றுணர்த்துமூலப்பிலாவொன்றேநின் ... *
றன்னென்றசாந்தவருளசார்ந்திடவுங்காண்பேனோ ... [௨௪]
ஒடுங்கருத்தொடுங்கவுள்ளுணர்வந்தான்றநின்னைக் .. ✡
கூடும்படிகலைறநீகூட்டிடவுங்காண்பேனோ ... [௨௫]
வாக்கான்மனத்தான் மதிப்பறியாய்நின்னருளை ... ❋
நோக்காமனோக்கிநிற்குநுண்ணறிவுகாண்பேனோ ... [௨௬]
இவ்வுடம்புநீங்குமுனேயெந்தாய்கேளின்னருளா .. .. ❋
மவ்வுடம்புக்குள்ளேயவதரிக்கக்காண்பேனோ ... [௨௭]
நித்தமாயொன்றாய்நிரஞ்சனமாய்நிர்க்குணமாஞ் ... *
சுத்தவெளிநீவெளியாய்த்தோன்றிடவுங்காண்பேனோ ... [௨௮]
கண்ணிறைந்தமோனக்கருத்தேயென்கண்ணேயென் ... *
றுண்ணிறைந்தமாயையொழிந்திடவுங்காண்பேனோ .. [௨௯]
அத்தாவிமலாவருளாளாவானந்த ... *
சித்தாவெனக்குனருள்செய்திடவுங்காண்பேனோ ... [௩௰]
வினைபிறந்திறந்துவேசற்றேனெஞ்சையறநா ... *
காணேனிறைநின்னருளைப்பெறக்காண்பேனோ ... [௩௧]
சட்டையொத்தவிவ்வுடலந்தன்னுள்ளேநான்சகச ... *
நிட்டையைப்பெற்றையாநிருவிகற்பங்காண்பேனோ ... [௩௨]
எல்லாந்தெரியவிறையாவென்னல்லவல்லாஞ் ... .. *
சொல்லாமுனிதான்றொருத்திரங்கக்காண்பேனோ ... [௩௩]
அண்டபகிரண்டமனைத்துமொருபடித்தாக் ... *
கண்டவர்கள்கண்டதிருக்காட்சியையுங்காண்பேனோ ... [௩௪]
ஊனிருந்தகாயமுடனிருப்பவெந்தைநின்பால் ... . ✡
வானிருந்ததென்னவுநான்வந்திருக்கக்காண்பேனோ [௩௫]
நினையத்தினையுந்தெளியவறியாப்பாவியே .. .. ❋
னினைவிற்பரம்பொருணீநேர்பெறவுங்காண்பேனோ [௩௬]
அன்பமெனுந்திடனைத்தஞ்சந்துறையிடவையாவே .. *
யின்பவெள்ளம்வந்தெங்கெதிர்ப்படவுங்காண்பேனோ... [௩௭]

முற்றிற்று-ஆக ௩௱௫௧.

---

## ஆகாதோவென்கண்ணி.

கல்லாதநெஞ்சங்கரைந்துருகவெந்தொழிற்கும் ... *
வல்லாய்நின்னின்பம்வழங்கிலாகாதோ ... ... [௧]

கையுங்குவித்திரண்டு கண்ணருவிபெய்பவரு ... ... *
ளையநின்றருட்கேழ படிமைநின்றுலாகாதோ. முற்றிற்று ஆக-தூகஉ

---

## இல்லையோவெங்கண்ணி.

ஏதந்தெரியா தென்மறைத்தவல்லிருளை ... ...*
நாதநீக்கவொரு ஞானவிளக்கில்லையோ ... ... ...(க
பணிபற்றநின்ற பதைப்பறவெங்கண்ணுண் ... *
மணியொத்தசோதியின்ப வாரியெனக்கில்லையோ ... ...(உ
எம்மாலறிவதற வெம்பெருமான்யாதுமின்றிச் ... ...*
சும்மாவிருக்கவொரு சூத்திரந்தானில்லையோ ... ... (ந)
நாய்க்குங்கடையானே னாதாநின்னின்பமயம் ... ...*
வாய்க்கும்படியினியோர் மந்திரந்தானில்லையோ ... (ச)
ஊனாகநிற்கு முணர்வைமறந்தையாநீ ... ... *
தானாகநிற்கவொரு தந்திரந்தானில்லையோ .. ... (ரு)
அலலும்பகலு மகண்டவடிவையுனைநான் ... .. *
புல்லும்படியெனக்கோர் போதனைதானில்லையோ. முற்றிற்று தூகஅ

## வேண்டாவோவெங்கண்ணி.

---

கண்டவடிவெல்லாநின்காட்சியென்றேகைகுவித்துப் ...*
பண்டுமின்றநின்றவென்னைப்பார்த்திரங்கவேண்டாவோ ... (க)
வாதனையோடாடுமனப்பாம்புமாயவொரு ... ... *
போதனைதந்தையாபுலப்படுத்தவேண்டாவோ ... (உ)
தன்னையறியத்தனியறிவாய்நின்றருளு ... ... *
நின்னையறிந்தென்னறிவைநீக்கிநிற்கவேண்டாவோ ... (ந)
அள்ளக்குறையாவகண்டிதானந்தமெனும் ... ... *
வெள்ளமெனக்கையாவெளிப்படுத்தவேண்டாவோ ... (ச)
அண்டனேயண்டரமுதேயென்றுருயினை ... ...*
தொண்டனற்கின்பந்தொகுத்திரங்கவேண்டாவோ ... (ரு)
பாராதேநின்றபதையாதேசும்மாதான் ... ... *
வாராவெனவும்வழிகாட்டவேண்டாவோ ... ... (சா)
முற்றிற்று- ஆக- தூஅச.

---

## நல்லறிவேயென்கண்ணி.

கண்ணிறைந்தமென்மைபடைத்தெவ்வுயிர்க்குமவ்வுயிராய்க் ...*
கண்ணிறைந்தசோதியைநாங்காணவா நல்லறிவே ... (க)
சித்தானநாமென்சடத்தைநாமென்னவென்றுஞ் ... *
சத்தானவுண்மைதனைச்சாரவா நல்லறிவே ... ... (உ)

அங்குமிங்குமெங்குநிறைபைம்புகனூர்பொற்பதித்து ... *
பங்கயத்துள்வண்டாய்ப்பயன்பெறவா நல்லறிவே ... (௯)
சான்றசோறென்னவிந்தக்காசினியாழ்வத்தனையுந் ... *
தோன்றவருள்வெளியிற்றோன்றவா நல்லறிவே ... (௰)

முற்றிற்று - ஆக - ௩௮௮.



## பலவகைக்கண்ணி.

என்னரசேகேட்டிலையோவென்செயலோவேதுமில்லை ... *
தன்னரசுநாடாகித்தத்துவக்கூத்தாடியதே ... ...(க)
பண்டொருகானின்பாற்பழக்கமுண்டோவெந்தைநினைக் ... *
கண்டொருகாற்போற்றக்கருத்துங்கருதியதே ... (௨)

வேறு.

கண்டனவேகாணாமன்றிக்காணாவோகாணாவென் ... *
கொண்டறிவேனெந்தைநினைக்கூடுங்குறிப்பினையே ... [௩]
கல்லாலடியில்வளர் கற்பகமேயென்னளவோ ... *
பொல்லாவினைக்குப்பொருத்தந்தான்சொல்லாயே ... [௪]
தப்பிதமொன்றின்றியதுதானாகிநிற்கவுண்மை ... ...*
செப்பியதுமல்லாலென் சென்னியதுந்தொட்டனையே ... [௫]

வேறு.

மாசானநெஞ்சனிவன்வஞ்சனென்றேவாய்திறந்து ... ..*
பேசாதமௌனம்பெருமான்படைத்ததுவே [௬]
கற்பதெல்லாங்கற்றேமுக்கண்ணுடையாய்நின்பணியாய் ... *
நிற்பதுகற்றன்றேநிருவிகற்பமாவதுவே ... ...[௭]
முன்னளவில்கண்மூடயன்றனிவனென்றே ... *
வென்னளவிலெந்தாயிரங்காதிருந்ததுவே ... [௮]

வேறு.

நெஞ்சகம்வேறாகிநினைக்கூடவெண்ணுகின்ற ... *
வஞ்சகனுக்கின்பமெந்தாய்வாய்க்குமாறெவ்வாறே ... [௯]

வேறு.

பள்ளங்கடோறும்பரந்தபுனல்போலுலகி ... *
லுள்ளம்பரந்தாலுடையாயென்செய்வேனே ... ... [௰]
முன்னிலைக்கப்பின்மறைக்குமூடவிருளாகெடுவே ... *
னென்னினைக்கவென்மறக்கவெந்தைபெருமானே ... [௰௧]
வல்லாளமோநுநின்வான்கருணையென்னிடத்தே ... *
யில்லாதேபோனாலெவ்வண்ணமுய்வேனே ... [௰௨]

வேறு.

வாக்குமனமுமவுனமுறவெந்தைநின்னை ... ...*
நோக்குமவுனமிந்தநூலறிவிலுண்டாமோ... ... [௰௩]

ஒன்றாய்ப்பலவாயுலகமெங்குந்தானேயாய் ... ... *
நின்றாயையாவெனைநீநீங்கற்கெளிதாமோ ... ... [௰௪]
ஆவித்துணையேயருமருந்தேயென்றனைநீ ... ... *
கூவியழைத்தின்பங்கொடுத்தாற்குறைவாமோ ... [௰௫]
எத்தனையோநின்விளையாட்டெந்தாய்கேளிவ்வளவென் ... *
றத்தனையுமென்னறிவுந்தரமாமோ ... ... [௰௬]
தேடியார்தேடுஞ்சிவனேயோநின்றிருத்தாள் ... ... *
கூடுவான்பட்டதுயர்கூறற்கெளிதாமோ ... ... [௰௭]

வேறு.

பற்றினைப்பற்றுமெந்தாய் பற்றுவிட்டாற்கேவலத்தி ...✡
லுற்றுவிடுநெஞ்சமுனையொன்றிநிற்பதெப்படியோ ... [௰௮]
ஒப்பிலாவொன்றேநின்றுண்மையொன்றுங்காட்டாமற் ... ✡
பொய்ப்புவியைமெய்போற்புதுக்கிவைத்ததென்னேயோ... [௰௯]
காலால்வழிநடவுங்காலத்தேகண்முளைத்தாற் ... *
போலேயெனதறிவிற்போந்தறிவாய்நில்லாயோ ... [௨௰]
தன்னரசுநாடாஞ்சடசாலபூமியிசை... ... ... ✡
பென்னரசேயென்னையிறையாகநாட்டினையோ ... [௨௧]

வேறு.

திங்களுடனாநின்றிருவாக்கைவிட்டரசே ... .. *
பொங்குவிடமனையபொய்ந்நூல்புலம்புவரோ ... [௨௨]
உன்னையுன்னைவென்னையெய்த்துவியுழுங்குதின்னிறைவை ... *
யின்னமினங்காணமலைந்தாய்சுழலவிலேன்றோ... ... [௨௩]
ஆராவமுதனையவானந்தவாரியையம்பாற் ... ... *
சூராமலையாநீதள்ளிவிடவந்ததென்றோ ... ... [௨௪]

பலவகைக்கண்ணி- முற்றிற்று- ஆக- சா௰௨.

நின்றநிலை.

நின்றநிலையேநிலையாவைத்தானந்த ... ✡
நிலைதானேநிருவிகற்பநிலையுமாகி ... ... *
வென்றுமழியாதவின்பவெள்ளத்தேக்கி .. ... *
யிருக்கவெனைத்தொடர்ந்துதொடர்ந்திருக்குமற்றோ.
இருக்காதிமறைமுடிவுஞ்சிவாகமாதி ... ...*
யிதயமுங்கைகாட்டெனவேயிதயத்துள்ளே ...*
யொருக்காலேயுணர்ந்தவர்கட்கெக்காலுந்தா ... *
னொழியாதவின்பவெள்ளமுதவாநிற்கும்... .. [௨]
கற்றதுங்கேட்டதுந்தானேயதுக்காகக் ... *
கடபடமென்றுருட்டுதற்கோகல்லாலெம்மான்... ✡
குற்றமறக்கைகாட்டுங்கருத்தைக்கண்டு ... ✡
குணங்குறியற்றின்பநிட்டைகூடவன்றோ ... [௩]

நின்றநிலை- முற்றிற்று- ஆக- துசா௰௫.

## பாடுகின்றபனுவல்.

பாடுகின்றபனுவலோர்கள்- தேடுகின்றசெல்வமே ... ✱
நாடுகின்றஞானமன்றி- லாடுகின்றவழகனே ... (௧)
அத்தனென்றநின்னையே பத்திசெய்துபனுவலாற் ... ✱
பித்தனின்றுபேசவே- வைத்ததென்னவாரமே ... (௨)
சிந்தையன்புசேரவே- நைந்துநின்னைநாடினேன் ... ✱
வந்துவந்துளின்பமே- தந்திரங்குதாணுவே ... (௩)
அண்டராண்டம்யாவுநீ- கொண்டுநின்றகோலமே ... ✱
தொண்டர்கண்டுசொரிகணீர்- கண்டறிந்தசுகமாயுமே ...(௪)
அன்னைபோலவருண்மிகுந்து- மன்னுஞானவரதனே .. ✱
மென்னையேயெனக்களித்த - நின்னையானுநினைவனே ... (௫)

பாடுகின்றபனுவல் - முற்றிற்று ஆக - ...

சிவமயம். 1.

## ஆனந்தக்களிப்பு.

சங்கர சங்கர சம்பு- சிவ - சங்கர - சங்கர சங்கர சம்பு.

ஆதியுமந்தமுமாகி- எனக்-கானந்த மாயறி வாய்நின் றிலங்கும்
சோதிமௌனியாய்த் தோன்றி- அவன் - சொல்லாதவார்த்தையைச்
சொன்னாண்டிதோழி - சங்கர .. ... ... ... ... ...(௧)

சொன்னசொல்லேதென்று சொல்வேன் - என்னைச் - சூதாய்த்
தனிக்கவே சும்மா விருத்தி - முன்னிலையேதுமில்லாதே-சுக- முற்
றச்செய்தேயென்னைப் பற்றிக்கொண்டாண்டி - சங்கர ... ... (௨)

பற்றிய பற்றற வுள்ளே- தன்னைப்-பற்றச்சொன்னான் பற்றிப்
பார்த்த விடத்தே, பெற்றதை யேதென்று சொல்வேன் - சற்றும்-
பேசாத காரியம் பேசினான் தோழி - சங்கர ... ... ... (௩)

பேசா விடும்மைகள் பேசிச்- சுற்றப்-பேயங்களாகிப் பிதற்றி
த்திரிந்தேன், ஆசாபிசாசைத்துரத்தி - ஐய - னடியிணைக்கீழேயடக்
கிக் கொண்டாடி - சங்கர ... ... ... ... ...(௪)

அடக்கிப் புலனைப் பிரித்தே-அவ - னாகியமேனியிலன்பைவள
ர்த்தேன், மடக்கிக்கொண்டாளென்னைத் தன்னுட்-சற்றும்-வாய்பே
சாவண்ண மருளுஞ்செய்தாண்டி-சங்கர ... ... .. .. (௫)

மரணைக் கெடுத்தனன் கெட்டேன்-இத்தை-வாய்விட்டுச் சொ
ல்லிடின் வாழ்வெனக்கில்லை, காவு புருஷனு மல்லன்-என்னைக் - காக்
குந் தலைமைக் கடவுள்காண் மின்னே-சங்கர .. ... ... ..(௬)

கடலின்மடைவிண்ட தென்ன - இரு கண்களுமானந்தக் கண்
ணீர் சொரிய, உடலும் புளகிதமாக -என - துள்ளமுருக வுபாயஞ்
செய்தாண்டி-சங்கர ... ... ... ... ... (௭)

உள்ளது மில்லதுமாய - மூன் - னுணர்வதுவாயுன் னுளங்கண்
டெல்லாந், தள்ளெனச்சொல்லியென் னையன் - என்னைத் - தானாக்
கொண்ட சமர்த்தைப்பார்தோழி - சங்கர ... ... (௮)

பாராதிபூதநீயல்லை - உன்னிப் - பாரிந் திரியங் கரணநீ யல்லை,
ஆராயுணர்வுநீ யென்றான் - ஐய - னன்பா யுரைத்தசொல் லானந்
தந்தோழி - சங்கர ... ... ... ... ... (௯)

அன்பருக் கன்பான மெய்யன் - ஐய - னானந்தமோனனருட்
குருநாதன், தன்பாதஞ் சென்னியில் வைத்தான் - என்னைத் - தானறி
ந்தேன்மனந் தானிறந்தேனே - சங்கர ... ... ... (௰)

இறப்பும் பிறப்பும் பொருந்த - எனக் - கெவ்வணம் வந்ததென்
றெண்ணியானே பார்க்கின், மறப்பு நினைப்புமாய்நின்ற - வஞ்ச -
மாயாமனத்தால் வளர்ந்ததுதோழி - சங்கர... ... ... (௰௧)

மனமேது கல்லாலெனக்கன்றோ - தெய்வ - மௌன குருவாகிவந்
துகைகாட்டி யானதாம் பணியற மாற்றி - அவ - னின்னருள் வெள்ளத்
திருத்திவைத்தாண்டி - சங்கர ... ... ... ... (௰௨)

அருளாலெவையும் பாரென்றான் - அத்தை - யறியாதே சுட்டி
யென் னறிவாலே பார்த்தேன், இருளானபொருள் கண்டதல்லாற் -
கண்ட - வென்னையுங் கண்டில னென்னேடிதோழி - சங்கர ... (௰௩)

என்னையுந் தன்னையும் வேறா - உள்ளத் - தெண்ணாதவண்ணமிரண்
டறநிற்கச், சொன்னது மொருசொல்லே - அந்தச் - சொல்லால்
விளைந்த சுகத்தை யென்சொலுவேன், சங்கர ... ...(௰௪)

விளையுஞ் சிவானந்தபூமி - அந்த - வெட்டவெளிநண்ணித் தட்ட
விருளாங், களையைக் களைந்தபின் பார்த்தேன் - ஐயன் - களையன்றி
வேறொன்றுங் கண்டிலன்தோழி, சங்கர ... ... ... ... (௰௫)

கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை - இரு - கண்காணநீங்கவுங் கண்
டோந்துயின்றான், கொண்டார்போற் போனதும்போகும் - இதிற்
குணமேது நலமேது கூறாய்நீதோழி ... ... (௰௬)

நலமேது மறியாத வென்னைச் - சுத்த - நாதாந்த மோனமா
நாட்டந்தந்தேசஞ், சலமேதுமில்லாமலெல்லாம் - வல்லான் - றாளை
யென்றலைமீது தாக்கினான்தோழி, சங்கர ... ... ... ...(௰௭)

தாக்குநல் லானந்தசோதி, அது, தன்னிற்சிறியவென்னைத் தன்
னருளாற், போக்குவரவற் றிருக்கும், சுத்த, பூரணமாக்கினான் புது
மைகாண் மின்னே, சங்கர... ... ... ... ...(௰௮)

ஆக்கி யளித்துத் துடைக்குந், தொழி, லத்தனைவைத்து மெள்
ளத்தனையேனுந், தாக்கறநிற்குஞ் சமர்த்தன், உள்ள - சாக்ஷியைச்சிந்
திக்கத் தக்கதுதோழி, சங்கர ... ... ... ...(௰௯)

சிந்தைபிறந்தது மாங்கே, அந்தச், சிந்தையிறந்து தெளிந்
ததுமாங்கே, எந்தநிலைகளுமாங்கே - கண்ட - யான்றானிரண்டற்றிருந்
ததுமாங்கே சங்கர ... ... ... ... (௨௰)

ஆங்கென்று மீங்கென்று முண்டோ, சச்சி, தானந்தசோதிய ண்ட வடிவாய், ஓங்கிநிறைந்தது கண்டாற் , பின்னர் , ஒன்றென் றுரைத்திடலாமோ, சங்கர... ... ...(

என்றுமழியு மிக்காயம், இந்தை, பேதக்கு மெய்யென் றீருலகீர், ஒன்றுமறியாத நீரோ , யம , ரேறிவந்தாற்சொல்லவு தாமுண்டோ, சங்கர ... ... ... (உஉ

உண்டோ நமைப்போலவஞ்சர், மல: மூறித்ததுப்பு மூடலை மெய்யென்று, கொண்டோமினைப்பதிங் கையோ, அருட், கோலத் தைமெய்யென்று கொள்ளவேண்டாமோ, சங்கர .. ... (உ௩)

வேண்டாம் விருப்பும் வெறுப்பும்- அந்த- வில்லகத்தாலேவி னையுஞ்சனனம், ஆண்டானுரைத்தபடியே- சற் மைபாதிருந்து கொள் ளறிவாகிநெஞ்சே - சங்கர ... (உ௪)

அறிவாருமில்லையோ வையோ- என்னை - யாரே நியாதவங்க தேசத்தில், வறிதேகாமத்தீயிற் சிக்கி- உள்ள - வாய்மையாருண்டோ வோ வந்தேனுந்தோழி- சங்கர ... ... (உ௫)

வந்தவரவைமறந்து- மிக்க- மாதர் பொன்பூமி மயக்கத்திலாழு ம், இந்தமயக்கை யறுக்க- எனக்-கெந்தை மெய்ஞ்ஞான வெழுத்தையா ள்கொடுத்தான்- சங்கர .. .. .. (உ௬)

வாளாருங்கண்ணியர் மோகம்- யம- வாதக்கணவளர்க்குமெ ய்யென்றே- வேளானவனுமெய் விட்டான்-எம் -மிகமோர்துற க்கை விதியென்றேதோழி- சங்கர ... ... உ௭)

விதிக்கும்பிரபஞ்ச மெல்லாஞ்- சுத்த- வெயின்மஞ்சளென்ன வேவேதாகமங்கள், மதிக்குமதனை மதியார்- அவர்- மார்க்கத்துன்மா ர்க்கஞ்சன் மார்க்கமேயாமானே- சங்கர ... ...உ௮)

துன்மார்க்கமாதர் மயக்கம்- மனத்-தூயர்க்குப்பற்றது சொ ன்னேன்ஜனகன், தன்மார்க்கநீதி யிட்டாந்தம்- அவன் - ஞானந்தமா ன சதானந்தனன்றே- சங்கர ... ... ..(உ௯)

அன்றென்றுமாமென்று முண்டோ - உனக் - கானந்தமேயவ டி னறிவாகிச்சற்றே,நிற்றெறியு மௌனவே மறை- நீதியேயாதி நிகழ்த்தினன்றோழி- சங்கர ... ... (௩௰)

ஆனந்தக்களிப்பு-முற்றுப்பெற்றது-ஆக-௩௰ய்.

---

## அகவல்.

---

திருவருண்ஞானஞ் சிறந்தருள்கொழிக்குங் ...௧
குருவடிவான குறைவிலாநிறைவே ... ௨
நிற்றலவான்றே நின்மலவடிவே ... ... ௩
குன்றுப்பொருள்ளே குணப்பெருங்கடலே ௪

பதுமத்தனையிசைந்த முலையென்றதையுகந்து ... ...
வரிவண்டெனவுழன்று கவிலெனவாடுஞ் ...
சிறகின்கிணிசிலம்பு புனைதண்டைகண்முழங்கும் ...
ஒலிதன்றெனமகிழ்ந்து செவிகொளநாசி ...

மஞ்சளின்வியந்த மணமுந்திடமுகந்து ...
பவமிஞ்சிடவிறைஞ்சி வரிசையினூடே... ...
காலின்மிசை முடிகுடிமயலாய் ... ... (௩௯

மருளுந்தெருளும்வந்து கதிபென்பதைமறந்து ...
மதனன்சலதிபொங்கவிரண்மதான ... ...
அளிபுண்டனைவளைந்து விரல்கொண்டுறவளைந்து ...
சரதஞ்சுகமிதென்று பரவசமாகி ... ...

மருவுந்தொழின்மிகுந்து தினமுந்தினமும்விஞ்சி ...
வளரும்பிறைகுறைந்தபடி மதிசோர ... ..
வானரமதென மேனிதிரையாய் ... ... (௩௩௨

வயதும்படவெழுந்து பிணிபற்றியிதிமென்று ...
வரவுஞ்செயலழிந்து விருமலுமாகி ... ...
அனமுஞ்செலுதலின்றி விழியுஞ்சுடர்களின்று... .
முகமுங்களைகளின்று சரியெனநாடி ... ...

மனையின்புறவிருந்த வினமுங்குலைகுலைந்து ... ..
கலகஞ்செயவிருண்ட யமன்வரும்வேளை ...
ஏதுதுணை பழிகாரமனமே ... ... (

வண்ணம் முற்றுப்பெற்றது - ஆக ௩௪௫௨.



# தாயுமானசுவாமிகள்பாடல்.

முற்றுப்பெற்றது.

